# ஸ்ரீமத் பகவத் கீதை

தமிழ் நாடகரங்கத்திற் கென்று

ஸ்ரீமான் ஸி. கன்னையா அவர்களியற்றியது



ஸி. கன்னையா கம்பெனியாரின் உத்திரவின்படி

டி. ஸி. வி. நாயகர் பிரசுரித்தது

ஸ்ரீமத்

# பகவத் கீதை

ஓர் தமிழ் நாடகம்

ஸ்ரீமான் வி. கன்னைய்யா அவர்கள்
இயற்றியது

முதற் பதிப்பு

வி. கன்னைய்யா கம்பெனியாரின் உத்திரவின்படி
டி. ஸி வி. நாயகர் பிரசுரித்தது.

# முகவுரை

காலஞ்சென்ற ஸ்ரீமான் ஸி. கன்னையா அவர்கள் நாடகவுலகில் அநேக சீர்திருத்தங்களைச் செய்து சிறப்பித்து வந்தார். அவற்றுள் சிறந்து விளங்கியது பகவத் விஷயங்களை கருத்தாகக்கொண்ட நாடகங்களைக் கையாளும் இவரது திறமே. மதாபிமானத்தைத் தூண்டுவதும், பக்திமார்க்கத்தைப் போதிப்பதுமாகிய நாடகங்கள், ஜனங்களின் மனதைக் கவர்வதைப்போல் ஏனைய நாடகங்கள் கவர்வதில்லை என்பதை நிரூபிக்க, இவர் அரங்கேற்றிய தசாவதாரம், ஆண்டாள் திருமணம்—ராமாநுஜர் வைபவம் முதலிய நாடகங்கள் உதாரணமாக நிற்கின்றன.

கடைசியாக, இவர் அரங்கேற்றத்துணிந்த யிந்நாடகம் இந்நாட்டில் பெரிதும் பாராட்டி, ஆதரிக்கப்பட்டு வருகின்றது. பக்தி சிரத்தையுடன் முழுமனதையும் இதில் செலுத்தி இவர் பட்டபாடு, அருகிருந்து நோக்கிய அன்பர்களே அறிவர்.

இந்நாடகத்தை அரங்கமேடையில் கண்டு களித்த பலர், இதை புத்தக ரூபமாய் வெளியிடுவேண்டுமென பன்முறை வேண்டியதாலும், இப்புத்தகத்தை நாடகநிகழ்ச்சிக் காலத்திலோ அல்லது அதற்கு முன்னரோ படிப்பதினால் இந்நாடகத்துள் அடங்கியுள்ள பல அரிய விஷயங்கள் தெளிவாகத் தெரியக்கூடுமாகையாலும், நான் இப்புத்தகத்தை இறைவனது திருவருளை முன்னிட்டு பிரசுரிக்கலானேன்.

இது நிற்க, இப் புத்தகத்தில் இடையிடையே சேர்த்திருக்கும் கீதை ஸ்லோகங்களும், பொதுப்பாடல்களும் தவிர, மற்ற கீதங்கள் ஸி. கன்னையா கம்பெனியின் உரிமையாதலால், இவற்றையாவது இப்புத்தகத்திலடங்கிய வசனங்களையாவது, இந்நாடகத்தின் ஓர் பகுதியாவது, முழுவதுமாவது, இதர நாடக கம்பெனியார், நாடகச் சங்கங்கள், நடிகர்கள் அல்லது மற்றெவரேனும் கையாள்வரேல், அவர்கள் சட்டப்படி நடிவடிக்கைகளுக் குள்ளாவார் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இந் நாடகத்தை பிரசுரஞ் செய்ய எனக்கு அன்புடன் அனுமதியளித்த ஸ்ரீமான் ஸி. கன்னைய்யா அவர்களின் அன்பார்ந்த மனைவியார் அவர்களுக்கு என் மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகிறேன்.

டி. சி. வடிவேலு.

# ஸ்ரீமான் வி. கன்னையா அவர்களின் ஜீவிய சரிதம்.

"தோன்றின் புகழொடு தோன்றுக; அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று."

என்னும் நாயனாரின் மணிவாசகத்திற்கு இலக்காய் விளங்கிய புண்ணிய புருஷரும், இந்நாடகாசிரியரும், தமிழ் நாட்டின் சிறந்த நடிகரும், தர்ம சீலருமான ஸ்ரீமான் கன்னையா அவர்கள், கலவைப்பாக்கம் சாத்தாத வைஷ்ணவ குலத்து வந்த ரங்கமன்னாரய்யா என்பவரின் பத்தாவது புத்திரராய் 1877ஞ ஜெனித்தனர். இவர் இளமையில் சென்னை 'பாண்டியா ஸ்கூல்' என வழங்கப்பெறும் 'ஹிந்து தியலாஜிகல் ஸ்கூலில்' சிலகாலமும், அக்காலத்தில் சென்னையில் பிரபலமாயிருந்த மா. வெங்கடராமய்யர் பள்ளிக்கூடத்தில் சிலகாலமும் நான்காவது வகுப்பு வரையில் கல்வி பயின்றனர். கல்வியில் இவருக்கு ஊக்கமில்லாததை யுணர்ந்த இவரது பெற்றோர் இவரை ஏதேனும் ஓர் கைத்தொழிலில் பழக்குவிக்கக் கருதி, சென்னை கோவிந்தப்ப நாய்க்கன் வீதியிலிருந்த பரூர் தியாகராஜ சாஸ்திரி அச்சுக்கூடத்தில் தெலுங்கு அச்சு கோர்க்கும் வேலையில் (தெலுங்கு கம்பாஸிடர்) அமர்த்தினர். அங்கு அவ்வேலையில் சிறிது தேர்ச்சியுற்று, சென்னை கவர்ன்மெண்டு அச்சு யந்திர சாலையில் தெலுங்கு அச்சு கோர்ப்பவராகச் சேர்ந்தனர். சென்னை நாடகரங்க ஸ்தாபகரும், அரிச்சந்திர நாடகம் நடிப்பதில் கீர்த்திவாய்ந்தவருமான காலஞ்சென்ற சுப்பராயாச்சாரியாரின் நாடகங்களுக்கு உடுப்புகளை வாடகைக்கு கொடுத்துவந்த சுப்பராயலு ராஜு என்பவர் இவரது வாச ஸ்தலத்திற்

கருகில் வசித்தனர். அவர் நாடகதினங்கள்தோறும் இரவில் உடுப்புகளை நாடகங்களுக்கு எடுத்துப் போகும்போது சிறு பிராயமுள்ள இவர் அந்த ராஜுவைப் பின்பற்றிச் சென்று அவரது வேலையாள் எனக் கூறிக்கொண்டு நாடகமேடையின் பக்க படுதாவின் பின்புறம் நின்றவாறே நாடகங்களைக் கண்ணுற்றுவந்ததின் பலனாய் நாடகக்கலையைக்கற்று நடிகராகவேண்டும் என்னும் எண்ணம் இவர் மனத்திடைப்புகுந்தது. இவரது எண்ணத்திற்கு இவரது பெற்றோர் இணங்கமாட்டார்கள் என்பதறிந்து, மனக் கலக்கமுற்றிருக்கையில், கோபாலராயர் என்பவர் சில தமிழ் நடிகர்களைச் சேர்த்துக்கொண்டு சிங்கப்பூரில் நாடகங்களை நடத்த புறப்படுவதைக் கேள்வியுற்றனர். இவர் தன் பெற்றோரின் அனுமதியின்றியே கள்ளத்தனமாய் அந்நாடகக் கூட்டத்தாருடன் கப்பலேறிச் சிங்கப்பூருக்குச் சென்றனர். அங்கு அவர்களுடன் சுமார் ஒரு வருஷம் வரையில் தங்கி யிருந்து சென்னை வந்து சேர்ந்ததும், காலஞ் சென்ற பிரபல நடிகர் தி. நாராயணசாமி பிள்ளை அவர்களது நாடக கம்பெனியில் இரண்டு ரூபாய் மாதச் சம்பளத்தில் ஓர் நடிகராய் அமர்ந்து சில்லரை வேடங்களில் தோன்றி நடித்து வந்தனர். நாராயணசாமி பிள்ளைக்கும், அவரது கம்பெனியில் கீர்த்தி பெற்ற நடிகராய் விளங்கிய காலஞ் சென்ற பாலகிருஷ்ண நாயகருக்கும் அவர்கள் மனமுவப்ப பல தொண்டுகள் புரிந்து அவர்களுடனேயே இருந்து தன்னுடைய சில்லரை நடிப்புகளின் பாட்டுகளும் வசனங்களுமன்றி ஏனைய நாடகப் பாத்திரர்களின் பாடங்களையும் இவர் மனப்பாடம் செய்து வந்தனர். இவரது சுய பாஷை தெலுங்காயிருந்தும், இவரது ஆசான் பிள்ளை அவர்கள் நடத்திய நாடகங்கள் முழுமையும் கேள்வி ஞானங்கொண்டே மனப்பாடம் செய்யும் ஆற்றலிருந்ததென்றால் இவரது ஞாபக சக்தியின் மேன்மை

வியக்தற்குரியதன்றோ? சுமார் 7 வருஷங்கள் வரையில் சில்லரை வேடங்களிலேயே தோன்றி நடித்தாரெனினும் இவரது நடிப்பைக் கண்டாரனைவரும் பிற்காலத்தில் தமிழ் நாடக ரங்கத்தில் இவர் ஓர் பிரபல நடிகராவார் எனப் புகழ்ந்துரைக்கலாயினர். சுமார் 32 வருஷங்களுக்குமுன் சென்னைக் கோட்டை மைதானத்தில் பம்பாய் பார்ஸி நாடக கொட்டகையில் தி. நாராயணசாமி பிள்ளை கம்பெனியார் நடித்த "சகுந்தலை" நாடகத்தின் இடைக் காட்சியில் இவர் "ஏழைப் பெண்ணாக" நடித்த உன்னத நடிப்புக் காட்சியை நான் நினைக்குந்தோறும் இன்றும் அது என் கண்கள் முன் நிற்கின்றது. மாதம் இரண்டு ரூபாய் சம்பளத்திற்கு அமர்ந்த இவர், எந்த நடிப்பையும் நடிக்கும் திறமை பெற்றாரெனினும் 7 வருஷங்கள் அங்கிருந்தும் மாதம் ரூபாய் ஒன்பதுக்குமேல் சம்பளம் உயர்வு அடைய மார்க்கமில்லையென்றும், முக்கிய நடிப்புகளில் நடிக்கும் சந்தர்ப்பம் இவருக்கு வாய்க்காதென்றும், தீர்மானித்து அக்கம்பெனியை விட்டு விலகி, இரங்கூனுக்குச் சென்றனர். காலஞ்சென்ற மதுரை பிள்ளையின் ஆதரவில் அங்கு நடந்த நாடகக் கம்பெனியின் பிரதான நடிகராய் விளங்கி, பல பொற்பதக்கங்களும், தோடாக்களும், சன்மானமாகப் பெற்று மிக்கப் புகழுடன் சென்னைக்குத் திரும்பினார். சென்னை "விக்டோரியா பப்ளிக் ஹாலில்" இப்பொழுது இவரது கம்பெனியிலிருக்கும் "வெள்ளை கிஷ்டன்" என அக்காலத்து வழங்கப்பட்ட கிருஷ்ணம செட்டியாரை ஸ்திரீ வேட நடிகராயும் இன்னும் சிலரை, சஹ நடிகராயுங் கொண்டு "ஸ்ரீ கிருஷ்ண விநோத சபா" என்னும் ஓர் நாடக கம்பெனியை ஏற்படுத்தி "சகுந்தலா" என்னும் நாடகத்தை நடித்தனர். அந்நாடகத்தின் கதா நாயகனான துஷ்யந்தனாக இவர் நடித்ததைக் கண்ணுற்றோரனைவரும் "இந்நடிப்புக்கு இவரே

இனி உரியவர்" எனப் புகழ்ந்து மகிழ்ந்துரைத்தனர். நாடக கம்பெனிக்கு வேண்டிய 'சீன்கள்' உடைகள் முதலியன தயாரிக்கப் போதிய மூலதனம் இவரிடம் இல்லாததால் இவர் தனக்கும் தன்னைச் சேர்ந்த சஹ நடிகர்களுக்கும் ஓர் நாடகத்திற்கு இன்னதொகை யென்று மொத்தமாய் பேசிக்கொண்டு, திருவல்லிக்கேணி நாடக கொட்டகையிலும், செங்கான் கடை நாடக கொட்டகையிலும், வால்டாக்ஸ் கொட்டகையிலும் நாடகங்களை நடத்தி அவைகளின் வருமானத்தில், இவரது சஹ நடிகர்களின் சம்பளம் போக, மிகுதியுள்ள தொகையைக் கொண்டு அப்போதைக்கப்போது கொஞ்சம் கொஞ்சமாக சீன்களும் உடுப்புகளும் தயாரித்துக்கொண்டு தென்னாடுகளுக்குச் சுற்றுப் பிரயாணஞ் செய்தனர். சுமார் மூன்று வருஷ காலங்கழித்து கீர்த்திப் பெற்ற நடிக மாதர்களுடனும், நடிகர்களுடனும் பார்ஸி கம்பெனியைப் போன்ற சீன்களுடனும், உடைகளுடனும் சென்னை வால்டாக்ஸ் தியேட்டரில் நாடகங்களை நடத்தி ஒப்பிலாக் கீர்த்தி பெற்றனர். மீண்டும் இவர் தென்னாடுகளுக்குப் பிரயாணம் சென்ற காலத்து இவரது கம்பெனியின் கீர்த்தியை கேள்வியுற்ற தஞ்சாவூர் சமஸ்தானாதிபதிகள், அவர்களது அரண்மனைக்குள் நாடகங்களை நடிக்க ஏற்பாடு செய்து, இவரது நாடகங்களைக் கண்டு களித்து பல அரிய சன்மானங்களை அளித்து இவரை கௌரவித்தனர். இன்னும், இவர் தனது நாடக கம்பெனியை விருத்தி செய்யக் கருதி, சென்னை மாகாணத்துப் பிரபல விதூஷக நடிகராய் விளங்கும் ஸ்ரீமான் சி. எஸ். சாமண்ணா அய்யரை தனது கம்பெனியின் மானேஜராகவும், நியூ ஆல்பிரட் பார்ஸி கம்பெனியிலிருந்த அமீர் ஆலி என்பவரை தனது கம்பெனியின் டைரக்டராயு மமைத்துக்கொண்டு இவர் நடத்தி வந்த சகுந்தலா, கண்டிராஜன், பூதத்தம்பி, சம்பூர்ண ராமா

யணம் முதலிய அரிய நாடகங்களன்றி சந்திராவளி, அப்ரத்-
சத்திய அரிச்சந்திரா, வசந்திகா என்னும் நவீன நாடகங்களை
பார்ஸி கம்பெனியாரும் பின்னடையும் வண்ணம் நடித்துக்
கீர்த்தி பெற்றனர். ஹரிச்சந்திரனாக நடிப்பதில், இவரை
நிகர்த்த ஓர் தமிழ் நடிகரை இதுவரையில் நான் கண்டே
னில்லை என்பது மிகையாகாது. இவர் நடித்த அரிச்சந்திர நடிப்
பின் விசேஷத்தை இங்கு குறிப்பிடாமலிருக்க முடியவில்லை.
அரிச்சந்திரன் தனது மனைவி மக்களைத் துறந்து, நாடுநகர்
இழந்து, சண்டாளனுக்கு அடிமையாகி, செங்கோலேந்தியகை
யில் சுடுகோலேந்தி மயானக் காவலனாய்த் தோன்றிய காட்சி
யில் அரிச்சந்திரனாக தமிழ் நாடகரங்கத்தில் நடிக்கும் ஏனைய
நடிகர்கள் போல 'செய்கி' உடை தரித்தும், வெள்ளித் தடி
யேந்தியும் தோன்றும் பொருத்தமற்றதும் அனுசிதமுற்
றதுமான புராதனப் பழக்கத்தைத் தகர்த்தெறிந்து, கிழிந்த
பழங்கந்தைகளை உடுத்து தலைவிரி கோலமாய் இவர் ஓர்கையில்
விளக்கையும் மற்றோர் கையில் சுடுகோலையும் ஏந்தி கன்மனத்
தவரும் கலங்கும் வண்ணம் நடித்து வந்தனர். தமிழ் நடிகர்
கள் இவர் காட்டிய வழியைப் பின்பற்றி நடிப்பதே முறை
யாகும் என்பதைக் குறிப்பிடவே இவரது அரிச்சந்திரன் நடிப்
பைப் பற்றி மாத்திரம் விவரத் தெழுதியுள்ளேன். இவரது
நாடக ஆசான் தி. நாராயணசாமி பிள்ளை பன்னிரண்டு பாகங்
களாக நடத்திய ஸ்ரீமத் ராமாயணத்தை "சம்பூர்ண ராமா
யணம்" என்று ஒரே நாடகமாய் முதன் முதல் நடத்தியவர்
இவரே யாவர். இவர் அந்நாடகத்தில், தசரதன், கைகேயி,
பரதன், மாயா சூர்ப்பனகை, சீதை, ஹனுமான், ஸ்ரீராமர்
ஆகிய ஆறு நடிப்புகளில் தோன்றி நடிப்பார். ஒரே நாடகத்
தில் பல வேடங்கள் பூண்டு நடிக்கும் அரிய ஆற்றலுடைய
வரை மேல் நாட்டார் "குய்க் சேன்ஜ் ஆர்டிஸ்ட்"

(Quick-change-artiste) அதாவது சடுதியில் மாறும் நடிகர் எனக் கூறுவர். அவ்வித பெருமையை தமிழ் நாடக மேடையில் முதன் முதல் வகித்தவர் இவரே யாவர். இராமாயணத்தில் இவரது பரதன் நடிப்பும், மாயா சூர்ப்பனகை நடிப்பும் நிகரற்றவை யென்னலாம். ஓர் நாடக கம்பெனியின் முதலாளியாயும் கீர்த்திபெற்ற நடிகராயும் விளங்கிய இவர் சில்லரை வேடங்களில் நடித்தல் அகௌரவம் என எண்ணும் தற்காலத்திய சில பிரபல நடிகர்கள் போலல்லாது "லவ—குச" நாடகத்தில், வண்ணாத்தியாக நடித்ததைக் கண்டு புகழாத தமிழ் நாடகாபிமானியுண்டா? இவரைப் போல் எந்த நடிப்பில் தோன்றினும் அந்நடிப்புக் குரிய வேஷப் பொருத்தமும், அதற்கேற்ப நடிக்கும் திறமையும் வாய்ந்த பிறிதொரு நடிகரை தமிழ் நாடக மேடையில் சுமார் என் முப்பது வருஷ நாடகானுபவத்தில் இதுகாறும் கண்டேனில்லை. இவரது நாடக கம்பெனி நாளுக்கு நாள் வளர்பிறைச் சந்திரன் போல் பிரகாசித்து கொளும்பு நகருக்குச் சென்று நாடகங்கள் நடத்திவருங் காலத்து, இவரது ஆசான் தி. நா. பிள்ளை அவர்கள் வறுமை யென்னும் வல்லரக்கன் வசத்தராய் இயம்பொண்ணாத இடுக்கண்களுக் குட்பட்டு வருந்துவதைக் கேள்வியுற்ற ஸ்ரீமான் கன்னையா, தன்னாலியன்றவுதவியை தனது குருவுக்குச் செய்வது, தனது இன்றியமையாக் கடமையென மனதிற்கொண்டு உடனே, சென்னையிலிருந்த தி. நாராயணசாமி பிள்ளை யவர்களைத் தருவித்து அவரது கஷ்டங்களைத் தவிர்க்கச்செய்ததன்றி, அவரை தனது நாடக கம்பெனியின் பிரதம நடிகரா யமர்த்திக்கொண்டு அவரது சௌகரியப்படி சிற்சில சமயங்களில் மாத்திரம் தான் நடித்துவந்த முக்கிய நடிப்புகளை அவருக்கீந்து கௌரவித்து, அவருக்கு வேண்டிய உபசாரணைகளைச் செய்து, மாதம்

ரூபாய் 250 அவரது செலவிற்குந் தந்து வந்தனரென்பதை நோக்கின், ஸ்ரீமான் கன்னையாவின் குரு பக்தியின் மேன்மை இத்தகையது என நன்கு விளங்கும். இவர் கொழும்பு நகரில் தனது ஜெயக்கொடியை நாட்டி தென்னிந்தியாவுக்குத் திரும்பி நாடகங்கள் நடத்திவருங்கால், இந்திய சித்திரக்கலை நிபுணரான ஹாசேன் பக்ஸ் என்பவர் சென்னை சுகுண விலாஸ சபையாருக்கு 'சீன்கள்' தயாரித்துக் கொடுப்பதைக் கேள்வியுற்று, சென்னைக்கு வந்து, அவரை தனது கம்பெனியின் சித்திரக்காரராக (artist) மாதம் 650 ரூபாய் சம்பளம் ஏற்படுத்தி அழைத்துச் சென்றனர். தமிழ் நாட்டார் அது வரையில் கண்டிராத பல அற்புத சீன்களைத் தயாரித்தனர். அவரது உதவியைக்கொண்டு, மஹா பாரதம், மஹா ஸ்காந்தம் என்னும் இரண்டு திவ்ய நாடகங்களை நடித்தனர். இவரது துரியோதனன் நடிப்பு புகழற்பாலதாகும். தமிழ் நாடகத்தொழில் நிர்வாகத்தில் இவரை நிகர்த்தார் எவருமில்லையென ஒப்பற்ற நிலையை யடைந்தனர். அச்சமயத்து, இவரது வினைப் பயனிருந்தவாறு, இவரது கம்பெனியின் முக்கிய நடிகர்களிற் பெரும்பாலோர் இவரைவிட்டு விலக, இவரது கம்பெனியின் வருமானங்குன்றி, பலவித துன்பங்களுக்குள்ளாக நேர்ந்தனர். அச்சமயம் யமவேதனையை யொத்ததும் கடன் வேதனையால் சங்கடத்திற்குள்ளானார். சுக துக்கங்கள் நமது மனத்தின் பாகுபாடே என்னும் தத்வம் உணர்ந்த ஸ்ரீமான் கன்னையா, சிறிதும் மனந்தளர்ந்தாரில்லை. இவரது கம்பெனியில் சில்லரை வேடந் தரித்து நடித்த நடிகர்களை பிரதான நடிப்புகளுக்குப் பழக்குவித்து வெளியூர்களில் நாடகங்களை நடத்தி, இவரது வாசஸ்தலமாகிய சென்னை வந்தடைந்தனர். செங்கான்கடை நாடக சாலையில் நாடகங்கள் நடிக்கப் புகுந்தனர்.

இவர் கடைசியாக சென்னையில் நாடக முடித்து வெளியூர் சென்று மீண்டும் வந்த ஆறுவருஷ இடைக் காலத்திற்குள் சென்னை நகரத்து நாடகமேடை சீர் கேடான நிலைக்கு வந்திருப்பதைக் கண்டனர். நாடகத்தில் 'நடிப்பே' (ஆக்டிங்) பிரதானமாயும், சங்கீதம் துணைக்கருவி யாகவும் இருந்த நிலைமாறி, நாடகச் சாலைகள் சங்கீதக் கச் சேரி சாலைகளாக மாறி, நடிகர்கள் சமயத்திற்கேற்றவாறு சம்பந்த முள்ளதும் இல்லாததுமான வார்த்தைகளை சாதுர்ய மாய்ப் பேசி, பொதுப் பாடல்களைப்பாடி, நாடகங்கள் நடித்து வருவதைக் கண்டு வருந்தினர். அச்சமயம், இவரது கம் பெனியில் ஜனங்கள் மனமகிழும்படி பாடக்கூடிய நடிகரில்லா ததால் இவரது நாடகங்களுக்குச்சரியான வருமான மில்லாது, மிகுந்த கஷ்டத்திற்கும் நஷ்டத்திற்கு முள்ளானார். ஜனங்க ளின் விருப்பின்படி சங்கீதத்தையே பிரதானமாகக் கொண்ட நாடகங்களை நடத்தி நாளடைவில் ஜனங்கள் மனப்போக்கை மாற்ற வேண்டுமெனத் தீர்மானித்தனர். இவரது கம் பெனியின் சீன்களை ஜோடித்துக் காட்ட செங்காங் கடை நாடகசாலையின் மேடை சிறியதானதால் இவர் ராயல் தியேட்டரை வாடகைக்கு எடுத்துக்கொண்டு, பாரம்பர்யமாய் சங்கீத வித்தையில் சிறந்து விளங்கிய செங் கோட்டைச் சகோதரர்களை, இவரது கம்பெனியின் முக்கிய நடிகர்களா யமர்த்திக் கொண்டு சங்கீதமே பிரதானமாகக் கொண்டு நாடகம் நடத்தும் முறையிலும் இவரை நிகர்த்தா ரில்லை என விளக்கிக் காட்டினார். வயதிற்கு மீறிய அபார சங்கீத ஞானமுடைய நமது S. G. கிட்டப்பாவை (அப் போது வயது 14) தருவித்தனர். மீண்டும் தமிழ் நாடக உலகில் இவரது ஜெயக்கொடியை நாட்டினர். அக்காலத்து தமிழ் நாடகமேடையில் பிரபல நடிகர்களான சின்ன பகா

தேவ ஐயர், காலஞ்சென்ற சூரியநாராயண பாகவதர், ஆரியகான செல்லப்பா ஐயர் முதலியவர்களுடன் கிட்டப் பாவை நடிக்கும்படிச்செய்து, ஜனங்களை மகிழ்வித்தனர். பின்பு ஒழுங்கான நாடகமுறைக்கு ஜனங்களைத் திருப்ப எண்ணங்கொண்டு சுமார் 20,000 ரூபாய் வரையில் செலவழித்து "ஸ்ரீ கிருஷ்ண லீலா" என்னும் நாடகத்தை தயாரித்தனர். தினசரி 45 நாட்கள் அந்நாடகத்தை நடத்தினார். தமிழ் நாடகத்தை தினசரி தொடர்ச்சியாய் நடிப்பது என்னும் நவீன முறையை புகுத்தினார். இந்த நவீன நாடகத்தை தென்னாட்டின் முக்கிய நகரங்களில் சுமார் 3½ வருஷங்கள் வரையில், சென்னையில் நடத்தியவாறே பிரதிதினமும் நடத்தி ஒப்பற்ற சீரும் பேரும் பெற்றனர். மீண்டும் சென்னை வந்தடைந்து, சுமார் ஒரு லக்ஷ ரூபாய் செலவழித்து இந்தியாவிலேயே எந்தநாடக கம்பெனியாரும் நடித்திராதவாறு 'தசாவதாரம்' என்னும் நாடகத்தை தயாரித்து சென்னையில் சுமார் 120 நாட்கள் வரையில் தினசரி தொடர்ச்சியாக நடித்தனர். இதைக் கண்ணுற்ற விலிங்டன் பிரபு, காசி மகாராஜா, மைசூர் மகாராணி, பரத்வான் மகாராஜா, சென்னை கவர்ன்மெண்ட் நிர்வாக அங்கத்தினர்கள் முதலிய அறிவாளிகளும், பொது ஜனங்களும் இந்நாடகத்தைப்போல பிறிதொரு நாடகத்தை எங்கும், எப்பொழுதும் கண்டதில்லை என வியந்து புகழ்ந்தனர். நாடகக் கலை அபிவிருத்திக்காக சென்ற 35 வருடங்களாய் அரும்பாடுபட்டு வரும் சென்னை சுகுண விலாஸ சபையார், நாடகத் தொழில் நிர்வாகத்தில் இவருக்கிருந்த அருந்திறமையைப் புகழ்ந்து "வாழ்த்துப் பத்திரம்" அச்சிட்டு ஜனங்களுக்கு வழங்கி, பட்டில் அச்சிடப்பட்ட அப்பத்திரமொன்றை வெள்ளியினால் சித்திர வேலைப்பாடுள்ள சட்டத்திலிட்டு, அக்காலத்தில் அச்

சபையாரின் அக்கிராசனராயிருந்த காலஞ்சென்ற சென்னை ஹைகோர்ட் நியாயாதிபதி ஸ்ரீமான் டி. வி. சேஷகிரி அய்யரைக்கொண்டு இவருக்கு சன்மானித்து கௌரவித்தனர். இவரது வாழ்நாட்களில் இதை ஓர் அரும் பெரும் சம்பவமாக எண்ணி மகிழ்ந்தனர் ஸ்ரீமான் கன்னையா. இந்நாடகம் வெளியூர்களில் நடிக்கப்பட்டு வருகையில், ஸ்ரீ வைஷ்ணவ சமய ஆச்சாரியரான ஸ்ரீமத் ராமாநுஜரின் சரிதையை நாடகமாக நடிக்க எண்ணி "ஆண்டாள் திருக்கல்யாணம்—ஸ்ரீ ராமாநுஜர் வைபவம்" என்னும் இரண்டு சரித்திரங்களையும் ஒன்று சேர்த்து ஓர் நாடகமாக ஏராளப் பொருட் செலவிட்டுத் தயாரித்தனர். இந்நாடகத்தையும் தசாவதாரத்தைப்போல் தினசரி நடத்தினரெனினும், அந்நாடகத்திற் குண்டான கீர்த்தியும் ஜனஆதரவும் இந்நாடகத்தில் அடைந்தாரில்லை. இவர் சங்கல்பித்துக் கொண்டபடி 1008 தசாவதார நாடகங்கள் நடிக்கப்பட்டு முடிந்ததும், எந் நாட்டினரும், எக்காலத்தினரும், எச்சமயத்தினரும், எக்கொள்கையினரும் விரும்பிப் போற்றும் ஸ்ரீமத் பகவத் கீதையை நாடகமாக நடிக்க விரும்பினர். மண்ணிற் பிறந்த மாந்தரனைவரும் ஸ்ரீமத் கீதையை உணரும்படிச்செய்ய நாடக மூலமாய் அதை போதிப்பதே இலகுவான மார்க்கமென வெண்ணி சுமார் ஒரு வருஷ காலமாய் இரவும் பகலும் அந்த சிந்தனையே யன்றி வேறெதையும் மனதில் கொண்டிலராய் அரியவேதாந்த ரகஸ்யங்கள்கொண்ட கீதை வாக்யங்களின் கருத்துரைகளைத் திரட்டி, எவர் மனதிலும் பசுமரத்தாணிபோல் பதியும்படி, இவரே பிறருதவியின்றி இந்நாடகத்தை யியற்றினர். இவர் கீதையை நாடகமாக நடிக்க எண்ணுவது பகற் கனவாகத்தான் முடியும் என எண்ணினர் சிலர். ஆனால் அவ்வித எண்ணங் கொண்டவர்கள் திகைக்கும் வண்ணம் ஸ்ரீமத் பகவத் கீதையை ஓர் அற்புத

நாடகமாகத் தயாரித்தனர். ராயல் தியேட்டர் மேடையில் இந் நாடகத்தின் கடைசீ ஒத்திகையைக் கண்டனர். மறு தினம் இவரது முதுகில் ஓர் நீர்க்குரு போல ஒரு கொப்பளம் தோன்றி இவருக்கு வேதனை கொடுக்க வாரம்பித்தது. அவ் வேதனையையும் பொருட் படுத்தாது மூன்று நாட்கள் வரை யில் நாடகச்சாலைக்கு வந்து சீன் ஜோடிப்புகளுக்கு வேண்டிய ஏற்பாடுகளையும், 1931ஞ ஆகஸ்டுமீ 26வ "கீதைநாடகம்" ஆரம்ப தினத்திற்கு வேண்டிய விளம்பர ஏற்பாடுகளையும் செய்தனர்.

இவரது உயிர்க்கொல்லியாய்த் தோன்றிய 'குரு' ராஜப் பிளவை என ஆங்கில வைத்திய நிபுணர்கள் பரிசோதித்துக் கூறி, இவர் நாடகச் சாலைக்குப்போவதைத் தடுத்து, வீட்டில் சிகிச்சையில் இருக்க எச்சரிக்கை செய்தனர். இவ்வாறு இவர் சிகிச்சையிலிருக்குந் தருவாயில், ஆகஸ்டுமீ 26வ புத வாரம், ஸ்ரீமத் பகவத்கீதையின் பிரதம நாடக மாரம்பமாயது. இவர், மதியும் நிதியுங்கொண்டு தயாரித்த இவ்வற்புத நாடகத் தைப் பார்க்கமுடியாதது பற்றி வருந்தினர். "நான் இந்நாட கத்தைச் செய்தேன் எனத் தவறாக ஒருக்கால் எண்ணியிருக்க லாம், ஆகையால், அவன் காரியத்தை அவனே நடத்திக் கொள்கிறான் போலும்" எனக்கூறினர். பகவான் கீதையின் ஆறாவது அத்யாயமாகிய ஆத்ம சம்யம யோகத்தில் "பரிபக் குவமடைந்த புருஷனை நான் விடமாட்டேன்" என்று திரு வாய் மலர்ந்துள்ள வாக்யத்தின் உண்மையை அவரது பக்த ராகிய ஸ்ரீமான் கன்னையாவைக் கொண்டே ஜனங்களுக்கு நிரூபிக்க திருவுள்ளங்கொண்டனர். நாடகம் ஆரம்பித்த ஆறாவது தினமாகிய ஆகஸ்டுமீ 31வ சோமவாரம் இரவு 7-30 மணிக்கு ஸ்ரீமான் கன்னையா அவர்கள், மண்ணகம் துறந்து விண்ணகம் புகுந்து, பரந்தாமன் பங்கஜக் கழலினைச்

சேர்ந்தனர். இப் புண்ய புருஷரின் அரிய குணங்கள் போற்றற்குரியவை. இவர் ஸ்ரீராம பக்தர். இவர் வால்மீக ராமாயணத்தை ஓர் சிறந்த வித்வானைக்கொண்டு தன் வீட்டில் தினந்தோறும் உபன்யாஸஞ் செய்வித்து சிரவணஞ்செய்து, 1929ஞ மேமீ 13உ ஸ்ரீராம பட்டாபிஷேக வைபவத்தைச் சிறப்பாகக் கொண்டாடினர். அவ்வைபவத்திற்காக சுமார் 50,000 ரூபாய் செலவிட்டனர். தமிழ் மாகாணத்துப் பிரபல சங்கீத வித்வான்களைக்கொண்டு, சென்னை ராயல் தியேட்டரில் ஒரு வாரம் பல அரிய சங்கீதக் கச்சேரிகள் நடத்தினர். ஆயிரக்கணக்கானவர்களுக்கு அன்னதானமும், வஸ்திரதான மும் வழங்கினர். இவரது கம்பெனி பிள்ளைகளுக்கும், சுற்றத் தாருக்கும், சிநேகிதர்களுக்கும் விலையுயர்ந்த வஸ்திரங்கள் சன் மானித்து மகிழ்ந்தனர். இவர் ஸ்ரீ வைஷ்ணவராயினும், அருட் பிரகாச வள்ளலாரென்னும் சிதம்பரம் ஸ்ரீமத் ராமலிங்க சுவாமி களின் பாடல்களிலும், அவரது கொள்கையிலும் அதிகப் பற்று கொண்டவர். காருண்ய சித்தங்கொண்ட கண்யவான். பரோபகார குணம் பொருந்திய புண்யவான். தாராள நோக் கங் கொண்ட தர்மவான். டாம்பீக வாழ்வை வெறுத்த தூயவான். இவர் கி. நாராயணசாமி பிள்ளை கம்பெனியில் சில்லரை நடிகராய் விளங்கியகாலத்து எவ்வித மிருந்தனரோ அவ்விதமே இவர் லக்ஷக்கணக்காய் பணம் வருமானம் பெற்ற காலத்தும் டாம்பீக மின்றி வாழ்ந்து வந்தனர். இவர் தனது கம்பெனி நடிகர்கள் ஏதேனும் தவறிழைத்த காலத்து, முன்கோபத்தால் அவர்களை அத்தருணம் கடிந்துப் பேசுவா ரெனினும், அடுத்த நிமிஷமே அக்கோபந் தணிந்து அவர்களது குற்றங்களை மறந்து அவர்களுடன் சகஜமாய்ப் பழகும் இயல் பினர். தொழில் நிகழ்ச்சி காலத்து மாத்திரம், அவஸ்ய நிமித் தம், இவர், தனது எஜமானத்வத்தைச் சிறிது தன் நடிகர்க

விடம் காட்டிவரேயன்றி மற்றக் காலங்களில், இவர் தனது நடிகர்களை, தனது சோதரர்கள் போலும், பிள்ளைகள் போலும் எண்ணி, அவர்களுடன் பேதமின்றி சமத்வமாய் குலாவிப் பேசும் அருங்குணவான். எவ்வித கஷ்டம் வரினும் இவர் எடுத்த காரியத்தை சாதிக்கவல்ல விடாமுயற்சியும் பிடிவாத குணமும் கொண்ட ஓர் தீரவான். "காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும் ஞாலத்தின் மாணப் பெரிது" என்னும் திருக்குறள் வாக்யத்தின்படி, பிறர் இவருக்கு தினையளவு உதவி செய்வாராயின், அதை இவர் மலையளவாக நினைக்கும் சுபாவமமைந்த உத்தம குணாளர். இவருக்கு பல இடுக்கண் விளைவித்து இவரை வஞ்சித்திருப்பவராயினும், அவர்கள் தம் குற்றம் உணர்ந்து, இவரைத் தஞ்சம் என அடைவாராயின், அவர்கள் செய்த கொடுங் குற்றங்களையும் மறந்து அவர்களை ஆதரிக்கும் சுகுண சீலர். அண்டினோரை ஆதரிக்கும் வள்ளல். இவர் தசாவதார நாடகம் நடத்தி சம்பாதித்த பணத்தில் பெரும் பகுதியை திருவரங்கம், ஸ்ரீ வில்லிபுத்தூர், திருக்கண்ணபுரம், திருக்கண்ணமங்கை, திருநாராயணபுரம், ஸ்ரீ பெரம்பூதூர், திருக்குடந்தை முதலிய திருப்பதிகளின் கைங்கரியங்களுக்கு விநியோகித்தனர். இதன்றி, சென்னை ராமகிருஷ்ண மாணவர் விடுதி, வாலிபச் சாரணர் சங்கம், குருடர், செவிடர் பள்ளிக்கூடம் போன்ற பல தர்ம ஸ்தாபனங்களுக்குப் பொருளுதவி செய்துள்ளார். தமிழ் நாடகச் சீர்திருத்தத்திற்காக அரும்பாடுபட்ட இவருக்கு ஓர் தகுதியான ஞாபகச் சின்னம் ஏற்படுத்த தமிழ் நடிகர்கள் முன் வாராதது வருந்தத்தக்கதெனினும், இவரது நாடக கம்பெனியே, இவருக்கு ஏற்ற ஞாபகச் சின்னமாகையால் தற்காலம் கம்பெனியின் நிர்வாகப் பொறுப்பை ஏற்று, திறமையாய் நடத்தி வரும் இவரது மனைவியார் அவர்கள், தனது

பர்த்தாவின் வழியைப் பின்பற்றி ஸி. கன்னையா கம்பெ னியை மென்மேலும் விருத்தி செய்து, அதன் கீர்த்தி என் றும் பிரகாசித்துக் கொண்டிருக்கும்படிச் செய்ய போதிய ஆற்றலையும், மனோதிடத்தையும் அவ்வம்மையா ருக்கு அருள, திருவேங்கடத் தீசன் திவ்ய பாதார விந்தங் களைப் போற்றிப் பணிகிறேன்.

டி. ஸி. வடிவேலு.

# ஶ்ரீமத் பகவத் கீதை

## ஸ்தோத்ர ஸ்லோகம்

ஸர்வோபநிஷதோ காவோ
தோக்தா கோபாலநந்தன:
பார்த்தோ வத்ஸஸ் ஸுதீர்போக்தா
துக்தம் கீதாம்ருதம் மஹத்.

ஸ்ரீ கிருஷ்ணாய நம:

# ஸ்ரீமத் பகவத்கீதை.



## அங்கம் 1. காட்சி 1.

*(ஹஸ்தினாபுரம் வீதி—அர்ஜுனன் பிரவேசம்.)*

*ராகம்-ஹிந்துஸ்தானி. தாளம்-ஆதி.*

*பல்லவி*

*தேவகீவர ஸுதனே வினுதனே அருள்*

*அனுபல்லவி*

*தீன ஜனமன ஹிதனே ப்ரபோதனே (தேவகி)*

*சரணம்*

*புவன வசீகரா புனித கோவிந்தா*
*புகழ் ஸ்ரீதர முகுந்தா அனந்தா (தேவகி)*
*கோகுல பரிபால சுசீலா எழில்*
*கோபியர் மன மோஹனனே விவேகனே (தேவகி)*
*துதிசெய் பாண்டு புத்ர ஸஹாயா*
*துணைவருவாய் நேயா மாயா (தேவகி)*

*(ஆத்மகதம்)*—கோபாலா! கோவிந்தா! நாங்கள் இதுவரையிலும் பட்ட கஷ்டங்கள் தாங்களறியாததா? தங்களுடைய உதவியினால் தானே துரியனால் எங்களுக்கு நேர்ந்த ஆபத்துகளினின்றும் தப்பினோம்: அவனுக்கு நாங்கள் என்ன துரோகம் செய்தோம்? நிரபராதிக

ளான எங்களையும் எங்கள் ஜேஷ்டராகிய தர்ம புத்திரரையுங்கூட, பலவிதத்திலும் மனம் நோகச் செய்தான். நாங்கள் தான் பொறுத் தோம்; இனி பூமி பொறுக்குமா? அடே! துர்புத்தே,! நாங்கள் ஸத்திய மென்னும் கயிற் றாலல்லவோ கட்டுண்டோம்! உனக்கு காலம் நெருங்கி விட்டது. உன்னையும், உன்னைச் சேர்ந்தவர்களும், உன் அளவு கடந்த சைன்யங் களையும், நாளை நடக்கும் பாரத யுத்தத்தில் காட்டுகிறேன்-இந்த விஜயனை-விஜயனாக.

உம்-எல்லாம் பகவத்ஸங்கல்பப்படி.

(துரியோதனன் மற்றோர் வீதிவழியாக பிரவேசம் இரண்டு சாரணர் எதிர்நோக்கிப் பிரவேசம்.)

சாரணர்:—மஹாப்ரபோ,! பாண்டவரில், அர்ஜுன மஹாராஜா, துவாரகைக்குப் போய்க்கொண் டிருக்கிறார். நாங்கள் பார்த்தோம்.

துரி:—சரி, நீங்கள் போங்கள், (ஆத்மகதம்) ஆஹா! காரியம் மிஞ்சிவிடும். நாமும் இப்போதே அர்ஜுனனுக்கு முன் கிருஷ்ணனிடம் போக வேண்டும். கிருஷ்ணனுக்கு என்ன? இது விஷயத்தில் பொதுவாகயிருக்க வேண்டியவன் தானே? ஆயினும் அர்ஜுனனுக்கு மாத்திரம் கிருஷ்ணன், சஹாயம் செய்யாதபடி முடிக்க வேண்டும்.

பாட்டு

ஓரோரிமூடா என்ற மெட்டு—ராகம்: ஹிந்துஸ்தானி: தாளம் ஆதி

பல்லவி

வீராதிவீர துரியோதனன் என்னை எதிர்
வெல்லும் வலிமையுள்ளவ ரில்லை இல்லையே. (வீ)

அனுபல்லவி

அவ்விபுதர்கள் முதலினோர்
பொருதினும் புறமுதுகிடச்செய்யும்
போர்வல்லாண்மை மேவு ச்லாக்யவான் (வீ)

சரணம்

ஆஹா த்ரோஹியர்கள் பாண்டு புதல்வர்களே
அவரென்னோடு போர்புரிய நேர்வருவரே
வாஹாயுத்த வெற்றியே நாமடைந்திடவும்
வகைகருதியே யோஜனைசெய்தே
ஜெயமடைவனே (வீ)

---

## அங்கம் 1. காட்சி 2.

## கிருஷ்ணன் அந்தப்புரம்

(ருக்மிணி எழுந்திருந்து பகவானை ஸ்தோத்ரம் செய்தல்.)

பாட்டு

ராகம்-ஹிந்துஸ்தானி. தாளம்-திச்ர ஏக.

ச்யாமஸுந்தர மதன மோஹன
சசிவதன ஸரோஜ நயன
தருணரூப குண கல்யாண
ஸஹஜ என்னபிமான (ச்யா)

ஸமான ரஹித ஸஜ்ஜன விஹித
ஸம்பன்ன ச்லாக்ய உசித
ஸர்வமங்கள காபராத் பர
ஸகி ருக்மிணி மனேஹர மனேஹர (ச்யா)

காமிதார்த்த பவதாயக
கருணவிந்தோ ஜகன்னயக
கோமளதர பல்லவபத
குண ஸ்ரீ பூதேவிஸஹித தேவிஸஹித (ச்யா)

---

(துரியன் ப்ரவேசித்து ஆஸனத்தமர்தல்
அர்ஜுனன் பிரவேசம்)

நமஸ்கரித்து ஸ்தோத்தரித்தல்,

சுலோகம். ராகம்-பூபாளம்.

உத்திஷ்டோத்திஷ்ட்ட கோவிந்தா
உத்திஷ்ட்ட கருடத்வஜா
உத்திஷ்ட்ட கமலா காந்தா
த்ரைலோக்யம் மங்களம் குரு.

ராகம்-பூபாளம். பாசுரம். தாளம்-ஆதி.

கதிரவன் குணதிசை சிகரம் வந்தடைந்தான்
கனையிருள கன்றது காலையம் பொழுதாய்
மதுவிரிந் தொழிகின மாமல ரெல்லாம்
வானவர் அரசர்கள் வந்துவந் தீண்டி
எதிர் திசை நிறைந்தனரிவரோடும் புகுந்த
இருங்களிக்கூட்டமும் பிடியோடு முரசும்
அதிர்தலில் அலை கடல் போன்றுள தெங்கும்
அரங்கத்தம்மா பள்ளி யெழுந்தருளாயே.

(கிருஷ்ணன் நித்திரையினி னின்றும் விழித்தெழுந்து.)

க்ரு:—சகல லோகங்களும் கொண்டாடும் ராஜ ச்ரேஷ்டர்களே! இன்று உங்கள் வருகையால் சந்தோஷித்தேன். அர்ஜுனு! வந்த காரிய மென்ன?

அர்:—சுவாமி, நாளை நடக்கும் யுத்தத்தில் தாங்கள் எனக்கு ஸஹாயம் செய்யவேண்டும்.

க்ரு:—துர்யோதனு! உன் அபிப்ராயமென்ன?

துரி:—தாங்கள் எனக்குத்தான் யுத்த சஹாயம் செய்யவேண்டும், நான்தான் முன் வந்தவன்.

க்ரு:—முன் வந்தது தாம்தான்; நான் கண்டதுமுன் அர்ஜுனனை; உம்; அதைப்பற்றியென்ன? நானே ஒருவன்; உங்களுக்கு சிநேகன்; பொது பந்து; இருவரும் ஸஹாயம் கேட்கிறீர்கள். அதற்கு ஒன்று சொல்லுகிறேன். இந்த பாரத யுத்தத்தில் நான் ஒருவர் பக்கத்திலும் ஆயுத மெடுத்து யுத்தம் செய்ய வரமாட்டேன். நான் ஒருவன் நிராயுதனாய் வருவேன். எனது பிள்ளை கள் கோபாலர்கள் அநேகமாயிரம் வீரர்களான ஆயுத பாணிகள், தருந்த சூரர்கள், அவர்கள் எல்லோருக்கும் நாராயணர்களென்று பெயர். அவர்களை ஸைன்யங்களாகவேண்டுமா? நான் ஒருவன் வேண்டுமா?

துரி :—ஸ்வாமி, ஸைன்யங்கள் முழுமையும் எனக்கே தான் வேண்டும். நானேதான் முன் வந்தவன்.

க்ரு :—சரி. அர்ஜுனா ?

அர் :—சரி, ஸ்வாமி, தாங்கள் நிராயுதராயிருந்தாலும் அருகிலிருந்து யுத்தத்தை நடத்திவைக்க வேண்டும்.

க்ரு :—நான் என்ன செய்வேன், உன் அண்ணன் துரியோதனன் முதலில் ஸைன்யங்களைக் கேட்டதால் ஸைன்யங்கள் கொடுக்க ஒத்துக்கொண்டேன். உனக்கு நான் ஒருவன் ; மேலும் நிராயுதன்; யார்தான் என்னசெய்யலாம்! உங்கள் அதிர்ஷ்ட மப்படி யிருக்கிறது.

துரி :—சுவாமி! விடைபெற்றுக்கொள்கிறேன்.

க்ரு :—நல்லது, துரியோதனா! போய்வாரும்.

துரி : (ஓர் புறமாக வந்து ஆத்மகதம்) ரொம்ப சந்தோஷமாச்சு, அதிருஷ்டம்-அதிருஷ்டமென்ன ? நான் ராஜ்யத்திலும், அவர்கள் காட்டிலும் தான். நான் துரியோதனன்-நான் நான்தான்.

(கிருஷ்ணன் மஞ்சத்தினின்றும் இறங்கிவந்து அர்ஜுனனுடன்.)

க்ரு :—அர்ஜுனா! நான்தான் முன் தரிசித்தவனென்று நீ வாதித்தால் அதற்கு அநேக ந்யா

யங்களிருக்கின்றன. அதைச் சொல்லி மாற்ற லாமென்று எதிர் பார்த்தேன். நிராயுதனை நான் ஒருவனே போதுமென்று நீ நினைத்துவிட்டாயே? ஏன்? உன்போல் பைத்தியனுண்டா?

அர் :—சுவாமி! என்னை சோதிக்கவேண்டாம். தங்கள் குழந்தைகள் நாராயணர்கள் அநேகமாயிரமல்ல, அநேகம் கோடி பேர்களானாலும் சரி, அவர்களுடைய உதவியை பெற நான் ஸம்மதிப்பேனு என்பது தங்களுக்குத்தெரியும். தங்களுக்கு தெரியுமென்பதும் எனக்குத்தெரியும். சுவாமி, தங்கள் திருவடியை ஸதா ஆச்ரயித்திருக்கும் எனக்கு யிவையெல்லாம் ஒரு பெரிய காரியமா? நான் தங்களைவிட்டு ஸைன்யங்களைக்கேட்பேனு? தர்மத்தினின்றும் தவறினவன் அல்லவா, தர்மஸ்வரூபியாகிய தங்களை விடுவான். ஹே அச்சுதா! அன்றும் தாங்களே. இன்றும் தாங்களே! மற்றென்றும் தாங்களேதான் எங்களுக்குக் கெதி.

க்ரு :—பார்த்தா! நான் உனக்கு யுத்தத்தில், ரதஸாரதியாய் வருகிறேன், என்னுலாகும் உதவி செய்கிறேன்.

அர் :—ஆஹா! ஹே பக்தவத்ஸலா! பரமதயாளா!

---

## கிருஷ்ணன், அர்ஜுனன் தர்க்கம்.

காயாகா பிஞ்ச என்ற மெட்டு.

ராகம்-ஹிந்துஸ்தானி காபி, தாளம்-ஆதி.

தாமோதர ஹரிஸ்ரீ கோபாலா ஜக
தலம்புகழ் சுகபரி பாலா (தாமோ)
பூமாதுறையும் திருமார்பா
புவனதிசராசர ரூபா
தவபுங்கவர் துதிசெய் ப்ரதாபா
பூ அரவணை துயில், பத்மனுபா சரண்
புரிபவர்க்கருள் ஞான தீபா. (தாமோ)

க்ரு: காண்டீப விஜயனே கனதீரா குண
கண்ய பாண்டு ஸுகு மாரா
பரிபூண்டிடும் அதி ரத வீர
ஸுர பூஸுரர் மகிழும் கம்பீரா
புகழ் பாரத சற்குரு ஸம்ஹாரா
புரந்தர புத்ர வுதாரா மிகு
புனித ச்லாக்ய முள்ள சதுரா. (காண்டீப)

அர்: என தன்னை பிதா குரு நீரே
உம்மை யல்லால் ஆதாரம் யாரே
என்னை ஆண்டருள் செய்திடுவீரே
உம தடிபணிந்தேன் கார்ப்பீரே என
தருமை தெய்வம் என்றும் நீரே. (தாமோ)

க்ரு: என் சோதரி ஸுபத்ரை மணாளா
ஸுதந்திர ஸுகிர்த சுசீலா
சௌபாக்ய விசேஷ தயாளா
சுபஸத்ய மேவும் ஸட்குணாளா யினி
சோகம் வேண்டாம் என் சொல்கேளாய் (காண்டீப)

(அர்ஜுனன் நமஸ்கரித்துச் செல்கிறான்.)

(ருக்மிணி பிரவேசம்.)

ருக் :—நாதா! ஜெகத்பதே! திருமஞ்சனத்திற்கு எழுந்தருளவேண்டும்.

க்ரு :—ருக்மிணி, என்னைத் தொடாதே. நான் இன்னும ஸ்நானம் செய்யவில்லை.

ருக் :—ஸ்வாமி, தாங்கள் எங்கும் நிறைந்தவர்; ப்ரம்ம பிதா; சூரியனுக்குச் சூரியன்; சந்திரனுக்குச் சந்திரன்; அக்கினிக்கு அக்னி; மன்மதனுக்கு மன்மதன்; ஸ்ரீயப்பதி, ஸதாசாரஸத்வநிதி, தங்களை ஸ்பரிசித்த திருவடி கைங்கரியத்தினலே யே நான் ப்ரஸித்தி பெற்றவள். தேவரீர் தோஷ ரஹிதரென்று அடியாள் அறிவேன்.

க்ரு :—ப்ரியே! உன் பக்திக்கு நான் கட்டுண்டவன். நீயோ ஜெகன்மாதா; நமது அவதார அந்தரங்கம், இந்த லோகமறியாது.

---

கிருஷ்னன் ருக்மிணி தர்க்கம்.

ராகம்-ஹிந்துஸ்தானி. தாளம்-ஆதி

பீஷ்மகுமாரி யென் ப்ரியபாமினி
ப்ரியபாமினி மதி நிகர் வதனி
ப்ரியபாமினி என் அருமை ருக்மிணி (பீ)

ருக். புவனஜன மோஹன புகழ் சுகுண
கண்ண புகழ் சுகுண
புகழ்சுகுண பனி முகில்போல் வண்ண (பு)

க்ரு. காட்சிக் கினிமைசேர் கண்ணலங்காரீ
கருணை சாந்த மன்பு நிறைந்தருணி (பீ)

ருக் யௌவனகுமாரா யதுகுலவீரா
எழில்கொள் சரோருஹ மலர்நயனு கண்ணு
மலர் நயனு (ப)

க்ரு. ஹ்ருதயமனோஹரி இன்பஒய்யாரி
எந்திழையே மலர் பூந்திருவே மலர் பூந்திருவே (பீ)

ருக். அகிலலோகஹிதா அன்பர் சமேதா
அநன்யசரண்யா வென் அருமைநாதா (பு)

---

(பகவானும் பிராட்டியும் உள்ளே செல்ல பணிப் பெண்கள் பரந்தாமனை ஸ்தோத்தரித்து கும்மி அடித்து பாத்திரங்களை எடுத்துச் செல்லுதல்.)

கண்ணி. ராகம்-இந்துஸ்தானி காபி தாளம்-ஆதி

சேஷசயன தாமோதரா முகுந்த
தீனஜன ரக்ஷகனே
ஜெயவினோத கருணாகரவலக
சராசர பக்ஷகனே

பூஷண கிரண கிரீட குண்டல
ஹாரா கௌஸ்துபனே
புவனமுழுதும் ஒரு பதத்தினளந்த
புண்ணியத்ரிவிக்ரமனே

கோஷம்செய்யும் பாற்கடல் கடைந்தமுது
கொடுத்தருளிய கரனே
குந்திதேவி மகிழ் பஞ்சபாண்டவர்
ஸஹாய தயாபரனே

தோஷரஹிதபரம பாவனு பெரும்
தூயவர் பணிபதனே
துரியதீத வைகுண்டநாதசுப
கரபஞ்சாயதனே (சேஷ)

---

## அங்கம் 1. காக்ஷி 3.

## ஹஸ்திஞபுரம்.

(வ்யாசர் பிரவேசம்.)

(சஞ்சயன் த்ருதராஷ்ட்ரன் பிரவேசம்.)

சஞ்சயன் :—மஹாராஜா வியாஸ பகவான் வருகிருர்.

த்ரு :—பிதா நமஸ்காரம்.

வ்யா :—புத்ரா! ஆசீர்வாதம். இந்த பாரத யுத்தம் பார்க்க உனக்கு நேத்ரங்கள் வேண்டுமா ?

த்ரு :—பிதா! எனக்கு நேத்ரங்கள் வேண்டாம் அந்த கோரமான யுத்தத்தைப் பார்க்க மாட்டேன். ஆனல், அங்கு யுத்தத்தில் நடக்கும் யாவும் காதினல் கேட்க அபேக்ஷையுண்டு. அனுக்ரஹிக்க வேண்டும்.

வியா :—ஸரி, புத்ரா உன் அபீஷ்டம் போலவே செய்கிறேன். ஸஞ்சயா! அங்கு யுத்தத்தில் நடக்கும், ஸம்பவங்களும் அவர்கள் பேசுவதும் மனதில் நினைப்பதும் எல்லாம் உனக்குத் தெரியும்படி அனுக்ரஹிக்கிறோம்.

த்ரு :—பிதா நமஸ்காரம்.

வியா :—ஆசீர்வாதம்.

## அங்கம் 1. காட்சி 4.

## ஹஸ்தினாபுரம் அரண்மனையில் ஓர் விடுதி.

(த்ரௌபதி பிரவேசம்.)

ராகம்-(ஹிந்துஸ்தானி. (மானுங்கஹாதி என்ற மெட்டு.) ஆதி.

ஸ்ரீமது சூதனனே அருள்
தீன தயாபரனே சுப காரனே
தீன தயாபரனே. (ஸ்ரீமது)

ஸத்வ ஸுகுண ஸ்ரீதரனே
துதி சார்ந்த பராத்பரனே பவஹரனே
சார்ந்த பராத்பரனே. (ஸ்ரீமது)

தேவா சுப விபவா கனதிவ்ய
சுபாவா வா-வா-வா கனதிவ்ய சுபாவ வா வா.
பூஜித ஸுக புனிதா புகழ் மேவும்
விநோதா போதா புகழ் மேவும் விநோதா போதா.

(ஆத்மகதம்) ஸ்ரீயப்பதே! ஸ்ரீநிவாஸ! பாண்டவ பந்து! பரமதயாளா! ஸர்வலோகங்களும், ஸகலமும் நீயே! நீ ஆட்டி வைத்தால் ஆடும் உலகமிது வென்று நானறிந்தாலும், நான் பெண்ணாதலால் என் மனம் கலங்குகிறது. நாளை நடக்கும் பாரதப் போரில், பீஷ்ம த்ரோணரும் போருக்கு வருவரே? என்ன ஆகுமோ? கோபாலா! கோபீஜன வல்லபா! அண்ணா! அண்ணா!

(பகவான் பிரசன்னமாதல்.)

ராகம்-பாகேஸ்வரி. தாளம் ஆதி-

க்ரு. ஸுகபாக்கியவதி இனி நீயே
ஸுகீர்த்தமடைவாயே ஸோதரியே (ஸு)

த்ரௌ. தாக்கும்பாரத யுத்தந்தனில் துணையாக
தயவு புரிவீ ரெங்கள் துயர் போக
தாங்கும் மன்போடு கார்ப்பீர் மகிழ்வாக

க்ரு. தயங்கிட வேண்டாம் அடைவாய்
ஜெய யோகம்

த்ரௌ. எம்மைக் கார்த்தருள் செய்திடுவீரே
கருணை புரிவீரே கதிநீரே (எம்)

க்ரு. பார்த்த சாரதியாகி நான் மன மகிழ்ந்தே
பகை களைவேன் உன் பதியோடு விரைந்தே
கீர்த்தி யடைவீர் புகழோடு நிறைந்தே

த்ரௌ. கேசவா உமது சரணினை பணிந்தேன்

க்ரு. ஸுக பாக்கியவதி நீயே

---

## இடைக்காக்ஷி: விகடன் பாட்டு

ராகம்: செஞ்சுருட்டி. (அலங்கார மலங்காரம் என்ற மெட்டு) ரூபகம்

சோத நற் சோதரிகாள்
சொல்லுவேனிதை எந்தன் (சோதர)

மாதவம் புரியும் சுத்த போதமுள்ள ஞானிகளும்
மாதவன் சொற் கீதை தன்னை மனனம்செய்து
[வருவா ரெந்தன் (சோதர)

ஆதரமே செய்து நீங்கள் அனுதினமும்
பக்தியுடன் கீதைமஹா சரித்திரத்தை கண்டு கீர்த்தி
[பெறுவீரெந்தன் (சோதர)

பரத குலத்துதித்த பாக்கியமுள்ள பார்த்தனுக்கு
வாதனுன வஸுதேவன் வருத்தம் நீங்கச்
[சொன்னதென்று என் (சோதர)

மாய வலையிற்புகுந்து மனந்தவிக்கும் மானிடர்க்கு
உபாய மிதுவென் றறிவீர் பரமவேத சாரமிதுவென்
(சோதர)

பங்கயத் துதித்தவனும் மங்கையுறைப் பாகத்தவனும்
சங்கையறச் சந்தமும் சிந்தனை செய்
[கீதை யிது வென் (சோதர)

பார்ப்பவரும் கேட்பவரும் படிப்பவரும் புவிதனிலே
சீர்பெருகும் செல்வ மோங்கி ஸ்ரீதானுக்
[காளாவாரென் (சோதர)

---

## அங்கம் 1. காட்சி 5.

### கடற்கரை.

(துரியோதனுதியர் படைவீரரும்,
பாண்டவர் படைவீரரும் சம்பாஷணை.)

து. ப. வீ:—அண்ணே இந்த, பாரதப்போர் நாளை நடக்கபோறதே, உன் அபிப்ராயம் என்ன? யார் பக்கம் ஜெயிக்கும்?

பா. ப. வீ:—நீ. துரியோதனன் ஸேனையைச் சேர்ந்தவன், நான் பாண்டவாள் ஸைன்யத்தை

சேர்ந்தவன்: உன் அபிப்ராயம் தான் என்ன சொல்லேன்.

து. ப. வீ:—துர்யோதனன் சூரன், பாண்டவாள் ஸாதுக்கள். சண்டையில் ஸாதுக்கள் என்ன செய்கிறது?

பா. ப. வீ:—ஆனல், துரியோதனராஜாவுக்குத்தான் ஜயமாகுமோ? அப்படிச் சொல்லமுடியாது, இந்த பாபிகள், அந்த பாண்டவர்களைப் படுத்தினபாட்டை நினைத்தால், இவர்களுக்கும் நினைக்க முடியாத கஷ்டங்கள் வந்துதான் தீரும். இருந்தாலும், உங்க பக்கம் எல்லா ராஜாக்களும், வருவாங்கபோலிருக்குது. ஆனல் கிருஷ்ணன் யெங்க பக்கமிருப்பதால், எதையும் சொல்ல முடியாது.

து. ப. வீ:—அண்ணே பேசின ஒரு பேச்சாப் பேசு, இரண்டும் கலந்து பேசுகிறயே?

2-வது:—நீ தான் சொல்லேன்.

து. ப. வீ:—நான் துரியோதனன் ஸேனையைச் சேர்ந்தவன்தான்: இருந்தாலும் எங்கள் பக்கம் அபஜெயந்தான்: பாண்டவர்கள் ஸைன்ய மில்லாமல் வந்தாலும், அவர்கள் இதுவரை பொறுத்த பொறுமை கோபமாய் முடிந்தாலோ, எத்தனை ஸைன்யமிருந்தாலும் பஞ்சு

போல் பறக்கும்: அவர்களுக்கு ஸைன்யமே வேண்டாமே, ஒரு அர்ஜுனன், அல்லது ஒரு பீமன், இல்லை, அந்த தர்மபுத்ரர் ஒருவரே போதுமே? நகுல சஹாதேவர் தானென்ன, ஸாமான்யரா? தமயன் வார்த்தைக்கு கட்டு பட்டிருந்தார். இப்போது தர்மபுத்ரர் அந்தக் கட்டை அவிழ்த்து யுத்தத்திற்கு விட்டிருக்கிரூர். இந்த ஐந்து சிங்கங்களுக்கு முன் எத்தனை மதயானைகளிருந்தபோதிலும், கர்ஜனை சத்தத்திலேயே மடியும். நான் சொல்வதை பிறகு பார்க்கப்போகிறீர்கள்.

து. ப. வீ:—ஆமாண்ணே, தாம் சொன்னது ரொம்ப சரி.

து. ப. வீ:—தம்பீ! இந்த ஊரும் யிந்த ராஜாவும் ஜனங்களும் மஹாபாபிகள். தொலையத்தான் போகிருர்கள்.

பா. ப. வீ:—அண்ணே, உங்க ஸைன்யத்தைப்பற்றி நீங்களே யிப்படி பேசலாமா? இது ராஜ த்ரோகமல்லவா?

து. ப. வீ:—நான் பேசினது, என்மனசிலே பட்டதைச் சொன்னேன். இந்த மனுஷன் பேசினது வேறேவிஷயம்.

பா. ப. வீ:—அது என்ன அண்ணே?

து. ப. வீ:—இந்த வூரில் இவருக்கு கடன் அதிகம். துரியோதன மஹாராஜா ஸைன்யங்களெல் லாம் செத்தால் இவர் கடன் கொடுக்க வேண்டியிராது. இது தான் இவருடைய தீர் மானம்.

பா. ப. வீ:—அப்படித்தானே அண்ணே?

து. ப. வீ:—அட, ஆமாமய்யா, ராஜாக்கள் சண்டை க்கு வேண்டிய திருந்தங்கள் செய்ததுபோல நானும் என் கடனுக்காக வேண்டிய தீர்மானம் செய்துவிட்டேன்.

பா. ப. வீ:—ஆனல் எந்த விதமாகக் கடன் தீர்க்கத் தீர்மானமோ?

து. ப. வீ:—நான் என்ன, அவ்வளவு பயித்தியக் காரனு? பத்தாவது நாள் சண்டையிலேயே, நான் கொடுக்கவேண்டிய கடன்காரர்களெல் லோரும் மடிவார்கள்: அதற்கு மேல் இன்னும் எட்டு நாள் சண்டையிருக்கு; ஆக பதினெட்டு நாள் சண்டையல்லவோ?

பா. ப. வீ:—ஆமாம், அண்ணே இந்த சண்டையில் நீயே முதலில் செத்தாலோ?

து. ப. வீ:—ஏனய்யா? இவ்வளவு கடன் வாங்கிட்டு கடன் கொடுத்தவர்கள் சாவை எதிர்பார்க்கும் நானு சண்டையில் முன்னிற்பேன்?

பா. ப. வீ :—ஆனல், என்னதான் முடிவு.

து. ம. வீ :—இப்போ நாம் பேசினதெல்லாம் வீண் பேச்சு.

பா. ப. வீ :—உம், உம், வீண்பேச்சாகுமா, ஏதோ ஒரு கார்யமாத்தான். யுத்தத்தின் முடிவு, யுத்தத்தலைவர்களுக்கே தெரியாதே. கடன்காரரே! நீர் ஜாக்ரதையாயிரும்.

து.ப.வீ :—யுத்த முடிவு தெரிந்த க்ருஷ்ண பரமாத்மா யுத்தத்திலும் உண்டு, என் பங்கிலும் உண்டு. சண்டையில் ஆஜர் கொடுத்த பிறகு நான் ஏன் அங்கிருக்கப்போறேன்.

பாட்டு

ராகம்-ஹிந்துஸ்தானி (தெரி மோரி ஜோரு என்ற மெட்டு)
தாளம்-ஆதி

து. ப. வீ. அண்ணே, அண்ணே, என்ன செய்யலாம், ஆஹா
பஞ்சைகளென்று நினைத்த
பாண்டவரும் துணிந்தாச்சு
பாரில் யாரும் நடுங்கலாச்சு (ஆஹா)

பா. ப. வீ. மிஞ்சிப்போச்சு மீறிப்போச்சு
வெஞ்சமரும் நேர்ந்துபோச்சு
அஞ்சியும் பயந்திடவு மாச்சுதே துரியன்

து. ப. வீ. சூரனென்று, தானினைத்தான்,
சூரனுக்கும், சூரனுண்டு
ஸாரமில்லை, யிவன் பக்கலில், ஐயோ

பா. ப. வீ. உத்தமராம், பாண்டவரை
மெத்த மனம் நோகச் செய்தான்
ஸத்தியம் ஸாதுக்களடைவார்-ஜெயம்.

து. ப. வீ. வாங்கின கடன் கொடாமல்
வழிதேடும் அண்ணனுக்கு
தாங்கியே, பேசாதே, அண்ணே, அநியாயம்

து. ப. வீ. ந்யாயமேது அந்யாயமேது
நம்புவது பைத்யமிது
பேசுவது தான்பேசுவேன்-அண்ணே
பிழை யிருந்தாலும் பொறுப்பாய், அண்ணே

து. ப. வீ. மிஞ்சிப்போச்சு மீறிப்போச்சு

பா. ப. வீ. பணம் போச்சு, பணம் போச்சு

து. ப. வீ. என், கடன் போச்சு, கஷ்டமும் போச்சு அண்ணே
(ஆஹா)

---

## அங்கம் 1. காட்சி 6.

### குருக்ஷேத்ரம், யுத்தரங்கம்.

(துரியன் ரதத்தை விட்டிறங்கி
துரோணருடன் பேசுதல்.)

துரி:—பாருங்கள் ஸ்வாமி! பாண்டு புத்ரர்களின் ஸைன்யங்களை. தங்கள் ப்ரிய சிஷ்யனும் த்ருபத மஹாராஜன் குமாரனுமாகிய த்ருஷ்டத்யும்னனால், வியூகமாக்கிய பெரிய ஸைன்யங்களுக்கு ஸேனா நாயகனாக ஏற்படுத்திய காரணத்

தைக்கவனியுங்கள். அங்கிருக்கும் ஒவ்வொரு சூரர்களும், பீமார்ஜுனர்களுக்கு ஸமான வீரர்கள். அப்படி பதினேழுபேர் தகுந்த வீரர்கள். அவர்களின் பெயர்: யுயுதானன், விராடன், காசிராஜன், துஷ்டகேது, சேகிதானன், த்ருபதன், புரிஜித், குந்திபோஜன், சைப்யன், யுதாமன்யு, உத்தமௌஜன், சுபத்ரைகுமாரனை அபிமன்யு, த்ரௌபதியின் புத்ரர்கள். இவர்களெல்லோருமே மஹாரதர்கள்.

துரோணர்:—நமது பக்கலில் சிறந்த சூரர்களில்லையா?

துரி:—இருக்கிறார்கள். அவர்களையும் சொல்லுகிறேன். பவான்-தாங்கள், பீஷ்மர், கர்ணன், ஜெயசீலராகிய க்ருபாசார்யர், அச்வத்தாமா, விகர்ணன், ஜெயத்ரதன் இன்னும் அநேக சூரர்கள் என்பொருட்டு தங்கள் தங்கள் ப்ராணனையும் விட ஆயுதங்களைத்தரித்து வந்திருக்கிறார்கள்.

துரோ:—இப்படி மஹாசூரர்கள் உன் பக்கமிருக்க உனக்கு பயமேன்?

துரி:—தாங்கள் ப்ராம்மணர், ப்ரம்மபலம், க்ஷத்ரிய பலம், இரண்டு பலமும் பூர்த்தியாய் உண்டு. தாங்கள் எனக்கு முக்ய ஸஹாயர். பீஷ்மர்-தன் ராஜ்யத்தைத் துச்சமாக நினைத்து தன்

பிதாவின் இளையாள் புத்ரனுக்கே ராஜ்யாபி ஷேகம் செய்வித்து, பிதாவின் அனுக்ரஹம் பெற்று தான் கோரும்போதே சரீரத்தை விடு வது என்னும் வரமும் பெற்றவர். கர்ணன்- இவன் மடிவானென்று சூர்ய பகவான் தடுத் தும், இந்திரனுக்கு கவச குண்டலங்களைத் தா னம்செய்து இந்திரனால் ஒருவனை ஒருதடவையி லேயே கொல்ல வரம்பெற்றவன். இவனும் எனக்கொரு பெருந்துணை. க்ருபாசார்யர், அச் வத்தாமா தங்களை ஒத்தவரே. ஜெயத்ரதன்- இவன் த்ரௌபதியை அபஹரித்துவர, பீமார் ஜுனர்கள் இவனைப் பிடித்துக் காட்டில் தண்டித் தார்கள். அவர்களை ஜெயிக்க இவன் சிவனைக் கோரித் தவஞ்செய்து அர்ஜுனனைத்தவிர மற் றவர்களை ஜெயிக்கலாமென்று சிவனிடம் வரம் பெற்றவன். அவனும் எனக்கொருதுணை. ஆயினும் - அபரிமிதமான நமது ஸைன்யங்கள் பீஷ்மராலல்லவோ ரக்ஷிக்கப்பட்டிருக்கிறது. அவர்களுக்கு மிதமான ஸைன்யங்களாயினும், பீமனால் ரக்ஷிக்கப்படுகிறது. ஆகையால், எல்லாவிதத்திலும், எல்லா மார்க்கங்களிலும் உங்கள் நிலைமையை விடாமல் பீஷ்மரையே ரக்ஷித்து வாருங்கள்.

(துரியன் பயந்து துரோணரோடு பேசுவதை அறிந்த பீஷ்மர் ஸிம்மநாதஞ்செய்து சங்கம்பூரிக்க,

இதைக்கேட்ட பாண்டவர் ஸைன்யங்களும் கிருஷ்ணார்ஜுனர்களும் சங்கம் பூரிக்கிறார்கள். பிறகு அர்ஜுனன் பகவானிடம் தன் ரதத்தை இரண்டு ஸைன்யங்களுக்கு மத்தியில் நிறுத்தும்படி ஆக்ஞாபித்தல்)

அர்ஜுனன். சுலோகம். ராகம் மோஹனம்.

ஸேநயோருபயோர் மத்யே
ரதம், ஸ்தாபயமே, அச்சுதா.
யாவதே, தான்னிரீக்ஷேஹம்
யோத்துகா மானவஸ்திதான்
கைர்மயா ஸஹயோத்தவ்யம்
அஸ்மின்ரண, ஸமுத்யமே.

அர்:—ஆச்ருத வாத்ஸல்யமுடையவனே! ஹே அச்சுதா! இந்த இரண்டு ஸைன்யங்களுக்கும் மத்தியில் என் ரதத்தை நிறுத்து.

க்ரு:—அர்ஜுனா யுத்தத்தில் கூடியிருக்கும் இந்த கௌரவர்களைப்பார்.

---

## அங்கம் 1. காட்சி 7.

## குருக்ஷேத்திரம்.

(யுத்தரங்கத்தையடுத்த வெளிப்புறம்.)

விகர்ணன் : (ஆத்மகதம்.)

ஆஹா, என்ன ஆச்சரியம்! உலகத்தில் எங்கள் கதையே பெருங்கதையாய் விளைந்தது. முன்

கதைகளுக்கு துஷ்டர் ஒருவர், யிருவர்: எங்கள் கதைக்கு துஷ்ட கதாநாயகர் நூறுபேர். ஆனால் பகவான் அதிக ப்ரயாசையில்லாமல் சகுனியென்னும் ஒருவனாலேயே துஷ்டர்களாகிய எங்கள் நூறு பேர் ஸம்ஹாரத்தையும் அனுயாஸமாக முடித்தார். இனி உலகம் எங்களையும் சகுனியையும் ஒருபோதும் மறவாது. எனதண்ணன் துரியன் வணங்காமுடியன் என்று உலகம் சொல்லினும் பாண்டவர் ஸைன்யத்தைப்பார்த்துப் பயந்து துரோணரிடம் தானே சென்று தனக்கு நேர்ந்த துன்பத்தைபற்றி முறையிட்டான். உம் - இவன் இனி என்ன யோசித்தென்ன? பகவான் ஸங்கல்ப்பித்துவிட்டார் துஷ்டரை அழிக்க. அதை மாற்ற யாரால் முடியும்? ஐயோ, இந்த த்வாபர யுக அந்தியத்திலேயே, எங்களால் கலியுகம் ஆரம்பித்துவிட்டது. தர்ம ந்யாயங்களைத்தெரிந்த க்ஷத்ரியர்களாகிய எங்கள் நூற்றுவருக்கு ஐவர்தான் உத்தமரென்றால் கலிகாலத்தின் கொடுமையென்னவாகுமோ? ஆயிரத்தில் ஒரு உத்தமனையாவது அறிவது அரிதாகத்தான் முடியும். பாபத்தினாலழிந்த நாங்கள் நூறுபேரும் உலகமுள்ளவரையிலும், உபமான புருஷாளானோம். ஸத்யத்திற்கு என்றும் அழிவில்லை. துரியன் என்ன நினைத்தான் பாண்டவர்களைப்பற்றி—உம்.

பாட்டு

கிளிக்கண்ணி-மெட்டு. தாளம்-ஆதி

அல்பஸஹாயரென்று, ஐவரையும் நினைத்தான்

இப்போ - தெய்வஸஹாயரென்ற-அறிந்து
துரியனும், துயரமுற்றான்

மஹா - பாபிகளுடன்-பிறந்தேன்
பாபி யன்னத்தையுண்டேன்-நான்
நாச நரகமும், பெற்றேன்-என்றும்
நானில மிகழவுற்றேன்

எங்கள் - தாயகூயையினால், தனயர்
நூற்றவரைப் பெற்றாள்-அந்த
மாயன் கருணை யில்லாதால்-போரில்
மாண்டு மடியலுற்றார்

அந்த - தெய்வமல்லாது துணை தேசமென்றே நினைத்து
மோசம் போன துரியன்-கதையை
முற்றிலும், உணரலாச்சு.
பாண்டுவின் புத்ரரென்பார்
பாண்டவர் நல்லோரென்பார்-இந்த
பாபியின், புத்ரரென்பார்-துரியர்
பாபமே வடிவமென்பார்

அந்தோ - நானேதும் செய்திலேன்
நாரணனே அறிவார்-இந்த
பேதைமதிகளோடு நான்
பிறந்ததே தோஷமென்றேன்

---

## அர்ஜுன விஷாதயோகம்

(யுத்தரங்கம்: ரதத்தில் க்ருஷ்ணார்ஜுன சம்வாதம்.)

அர்ஜுனன் :—க்ருஷ்ணா! யுத்தத்திற்கு வந்த நான் இந்த பந்துக்களைப் பார்த்ததும், என் சரீரம் முழுவதும் எரிகிறது. வாய் உலருகிறது. காண்டீபம் கையினின்று தானாய் நழுவுகிறது. நிற்க முடியவில்லை. என் மனதில் ஏதோ ஒரு ப்ரமை உண்டாயிருக்கிறது. விபரீதமான துர்ச்சகுனங்கள் ஆகின்றன. பந்துக்களைக் கொன்று நாங்கள் க்ஷேமமடைவோமென்று நான் எண்ணவில்லை.

க்ரு :—துர்ச்சகுனங்கள் எதிரிகளுக்காக ஆகிறதென்று நினைக்கக்கூடாதா; நீ மஹா தீரனென்று எண்ணி நானும் உனக்கு ஸாரதியாய் வந்தேன். க்ஷேமம் ஒன்றும் உண்டாகாதென்று நினைக்கலாமா? ஜெயம் விசேஷமானதல்லவா. நீ விஜயனல்லவா?

அர் :—கோவிந்தா! ஸகலேந்த்ரிய நியாமகராகிய தாங்கள் என் மனோபாவம் தெரியாதவரா? எங்களுக்கு ராஜ்யம் வேண்டாம், ஸுகம் வேண்டாம், ஜெயம் வேண்டாம், மற்றெதுவும் வேண்டாம். ராஜ்யமும் ஸுகமுமடைந்து எங்களைப்

பார்த்து சந்தோஷிக்கவேண்டியவர்கள், இப்போது, தனம், பூமி, தாரபுத்ராதி பந்துக்களை விட்டு யுத்தத்தில் மடிய மரணசாஸனம் செய்துவிட்டு வந்திருக்கிறார்கள். இவர்கள் யாரென்றால், எங்களுக்குப் பிதாமுறையுடையோர், ப்ராதாக்கள், புத்ராள், பௌத்ராள், மாதுலர், ஸம்மந்திகள், ஸுஹ்ருத்துகள், இஷ்டாள், மைத்துனர், பிதாமஹர், ஆசாரியார், இவர்களைக் கொன்று உதிரத்தில் தோய்ந்த இந்த ஐச்வர்யத்தை மாத்திரமல்ல, இதனோடு மூன்று லோகாதிபத்யம் கிடைத்தாலும் வேண்டாம்.

கிரு:—அர்ஜுனா! த்ருலோகாதிபத்யம் கிடைத்தாலும் வேண்டாமென்று சொல்லுகிறாயே, அவர்கள்மீது உனக்கிருக்கும் விஸ்வாஸம் உங்கள்பேரில் அவர்களுக்கில்லையே. ஆததாயிகளாகிய இவர்களை முன்பின்பாராமல் கொல்லலாம். பாபம் கிடையாது. ஆததாயிகளென்றால், வாழும் வீட்டிற்கு தீயிட்டவன், விஷம் கொடுத்தவன், ஆயுதங்களோடு கொல்லவந்தவன், தனம் அபஹரித்தவன், பூமி அபஹரித்தவன், ஸ்திரீயை அபஹரித்தவன். இந்த ஆறு பாபங்களில் ஒன்று செய்தவனையும் ஆததாயியென்ற விதிப்படி கொல்லலாம். இந்த துர்யோதனனோ உங்களுக்கு அரக்குமாளிகை

யில் உங்களைவைத்து தீயிட்டான். உனது அண்ணன் பீமனுக்கு விஷம் கொடுத்தான். இப்போது ஆயுதங்களுடன் உங்களைக்கொல்ல, யுத்தத்தில் வந்திருக்கிறான். உங்கள் ராஜ்யம் அபஹரித்தான். ஸகல ஐச்வர்யங்களையுமப ஹரித்தான். த்ரௌபதியை ஸபையில் மான பங்கம் செய்தான். இந்த ஆறு பாபங்களைச் செய்த இவனைக்கொல்வதோடு இவனுக்கு உதவிவந்தவர்களை முதலில் கொல்லவேண்டும்.

அர் :—க்ருஷ்ணா! பேராசையுடைய இந்த மஹா பாபிகளைக்கொன்றால், நமக்குப்பாபமே ஸித் திக்கும். இவர்களால் நிர்தோஷர்களாகிய அநேகம் பந்துக்களையும் கொல்லயேற்படும்.

ராகம் : ஹிந்துஸ்தானி தாளம் : திஸ்ரஏகம்.

க்ரு :— விஜயாகண்டீப வீரா, விநயகுணசதுரா
புஜகம்பீரா, போர்செய்தீரா
பொருந்தும் விசனமேதுகூறாய்
புகழ்குருவம்சவரா—விஜ

அர் :— மரகதமேனி மாயா, மதித்திடும்சத்ருஜெயா!
பெரியாரைத்தாக்கி ப்ராணனைப்போக்கி
பெரும்செல்வமதை விரும்பேனே,
பிசகின்றி மொழிந்தேனே—மரகத.

க்ரு :— துணிந்தபின் சிந்தை சோருதல் விந்தை
சூரர் உன்னையே இகழாரோ—உன்
ஸோதரரும் மதிப்பாரோ—விஜ.

அர் :—கதிநீர் காரும், கண்ணுல்பாரும்
கர்த்தா எனது துயர் தீரும்
கருணைசெய்யும், உசிதா—மரகத

க்ரு :—கௌந்தேயா! நீ யுத்தம்செய்து ஜெயிக்கவேண்டாமா? என் தங்கை ஸுபத்ரைசௌக்யமடையவேண்டாமா? உன் தாயாகிய என் அத்தை குந்திதேவி வீரமாதாவென்னும் க்யாதி அடையவேண்டாமா?

அர் :—ஹே மாதவா! லக்ஷ்மீபதே! நீ நினைத்தால், உன் தங்கைக்கு ஸகல ஐச்வர்யங்களும் கொடுக்கலாகாதா. குசேலருக்குக் கொடுக்கவில்லையா?

க்ரு :—அர்ஜுனா! அட பைத்யனே. குசேலர் ப்ராம்மணர். யாசித்தார், கொடுத்தேன். நீ க்ஷத்ரியனல்லவா, யாசிக்கலாமா? நீ யுத்தம் செய்துதான் தனம் அடையவேண்டும். நீ தனஞ்செயனல்லவா? மேலும் பீஷ்மத்ரோணுதியர் தர்ம சாஸ்திரங்களை அறியாதவர்களா? யுத்தம் வேண்டாமென்று உனக்குத் தோன்றினதுபோல் அவர்களுக்கேன் தோன்றவில்லை. இன்னும் நீங்கள் ஆரண்யத்தில் பன்னிரெண்டு வருஷம் வனவாஸமும், ஒரு வருஷம் அக்ஞாத வாஸமும் எப்போது கழியுமென்று கார்த்திருக்கவில்லையா? உனக்கு ராஜ்ய ஆசையில்லாமலா யுத்தத்திற்கு வந்தாய்?

அர்:—நாங்கள் ராஜ்ய ஆசையிருந்துதான் வந்தோம். இந்த க்ஷேத்ரத்துக்கு வந்து, இந்தப் பெரியோர்களைப் பார்த்தவுடன், இந்தப்பாப கார்யமான யுத்தமே வேண்டாமென்று தோன்றினது.

க்ரு:—ஆம், உங்கள் குணம் மாத்திரம் மாறுவானேன்?

அர்:—தங்கள் ஸன்னிதான மஹிமையினுல். ஹே ஜனார்த்தன! உன்னை ஆச்ரயித்தவர்களுக்கு புனர்ஜென்மமில்லாமல் செய்யும், உன் மகத்துவம் யாரே அறிவர். ஸ்வாமி, யுத்தம் நடந்தால் குலக்ஷயமாகும், ஸ்திரீகள் கெடுவார்கள். குலதர்மமும் நசிக்கும்.

க்ரு:—குலக்ஷயத்தினுலுண்டாகும் கெடுதலென்ன? விபரமாகச்சொல். ஸ்திரீகளைப்பற்றி என்ன சொல்லுகிறுய்?

அர்:—சுவாமி, யுத்தம் நடந்தால் அநேகம் ஸ்திரீகள் அமங்கலிகளாவார்கள். அவர்களை ஸம்ரக்ஷித்து ஹத்தில்வைக்க பர்த்தாக்கள் யில்லாததால், விபசாரிகளாவார். ஸஹஜமாய் ஸ்திரீகள் பயத்தினுலும், மற்ற ஜனங்களிருப்பதினுலும், பரபுருஷன் வர பயப்படுவதினுலும்தான் பதிவ்ருதைகள். தவிர புருஷனில்லாத ஸ்திரீயை

ஒருவர் பார்த்துக் கெடுக்கவேண்டாம். தன்ஞல் தானே கெடுவாளென்று பெரியோர்கள் சொல்லியிருக்கிரூர்கள்.

க்ரு :—ஸ்திரீகள் கெட்டால் உனக்கென்ன நஷ்டம்?

அர் :—வர்ணஸங்கரமாகும், நரகம் ப்ராப்திக்கும்.

க்ரு :—நசித்தகுலத்துக்குத்தானே அப்படி ஆகும்?

அர் :—அந்தக்குலத்துக்கு மாத்திரமல்ல, நசிக்கச் செய்த குலத்திற்கும் நரகமே. மேலும் பிதிர்க்கள், பிண்டோதகங்களும் சிராத்தாதி கிரியைகளும் இல்லாமல், அதோகதியாவார்கள்.

க்ரு :—அர்ஜுனு, நான் கேட்டுக்கொண்டிருக்கயிருக்க உன் பாண்டித்யத்தை அதிகமாய்க் காட்டுகிறுய்.

அர் :—ஜனர்த்தனு! இவை என் பாண்டித்யமல்ல. பெரியவர்கள் சொன்னதைக் கேட்டுச் சொன்னேன்.

க்ரு :—அர்ஜுனு, உனக்கு இவ்வளவு யோசனையும் முன்பே இல்லாமல் போச்சுதே, அது தான் ஆச்சர்யம்.

அர் :—சுவாமி, பாண்டவர்கள் அநித்ய ராஜ்ய ஸுகத்தில் ஆசைவைத்து, பந்துக்களையும் பீஷ்மத்ரோணுதியரையும் கொல்லத் துணிந்தார்களல்

லவா என்னும் உலக அபவாதத்துக்கு ஆளாக நினைந்தேனே என்று நானும் ஆச்சர்யப்படு கிறேன்.

க்ரு:—அர்ஜுனு, நீ அவர்களைவிட்டாலும், உன்னை அவர்கள் கொல்லாமல் விடமாட்டார்கள்.

அர்:—அப்படி அவர்கள் என்னைக் கொல்வாரானல், எனக்கு க்ஷேமம். யுத்தம் செய்து சிலரைக் கொன்ற பிறகு இறப்பது க்ஷேமதரம். இதரா னைக்கொல்லாமலே இறப்பது க்ஷேமதமமாகும். (ஆத்மகதம்) ஏது, நான் தனுஸும் பாணமும் கையில் வைத்திருக்கும்வரையில் சுவாமி என்னை விடமாட்டார்.

(அர்ஜுனன் வில்லையும் பாணங்களையும் விட்டெறிந்து மோஹமடைதல்.)

க்ரு. (ஆத்ம.)—நான் ஹ்ருஷிகேசனல்லவா. அர்ஜுனன் மனதை நான் மாற்றினபடியே அவனும் நடந்தான்.

ராகம்: கானடா — தாளம்: தேசாதி.

சிலமேவும் தனஞ்செயன்மிகவாடினன்
வாடினன் என்னை நாடினன், செய்
வகையறியாமல், மிகவும், மனது
சஞ்சலமடைந்து, வருந்தியவிதமென்ன— சிலமேவும்

நாலுவேதம், ஷட்சாஸ்திர, புராணம்
நல்லிதிஹாஸ, வகையாவும்

சாலவும் இதை உணர்ந்தறிந்தவன் தைர்யம்
தன்னை நழுவவிடலாமா? ஸஹித்திடும்
தன்மையிதைக் கைவிடப்போமா—சீலமேவும்

அர்ஜுனனுடனிவ்வகிலத்தில் வாழ்வோர்
அனைவரும் என்னை அறியாரே
அவர்களுக்கறிவுதந்தருள்புரிவது என்
ஆணையிலே வளர் சீரே
அவதரித்திடும் என்னைத்தெரிந்துமேவேறாய்—சீல

வ-ம்.—இனி நான் அவனைக் கடாக்ஷிக்கிறேன். ஸ்திர புத்தியையும் கொடுக்கிறேன். இவை யெல்லாம் அவனுக்கு, கீதையை போதிக்க வேண்டியே.

---

## அங்கம் 1. காட்சி 9.

## வனாந்திரம்

(பைசாசங்கள் பூதங்களின் ஆரவாரம்)

மு.பூ.—தம்பி, பாதாளகாமி, நீ எங்கேயிருந்து வருகிறாய்?

இ.பூ.—அண்ணே ஆகாசகாமி, நான் அதலலோகம் முதல் பாதாளலோகம்வரை போய்வருகிறேன்.

மு.பூ.—தம்பீ, என்னடா உடம்பெல்லாம் மெலிந்திருக்கிறது?

இ·பூ.—அண்ணே, வெகுநாளாக நரமாம்ஸ ஆகாரமே இல்லாமல் வாடி வருந்திமெலிந்தேன். ஆனால் இப்போது நீ எங்கிருந்துவருகிருய்?

மு·பூ.—தம்பீ! நான் ஆகாயமெல்லாம் சுற்றி ப்ரம்மலோகம்வரையில் போய் வருகிறேன். ஆனல் ஒரு விசேஷம், நீ கவலைப்படாதே. நாளை நடக்கும் பாரத யுத்தத்தில் நமக்கு நல்ல நரமாம்ஸ ஆகாரமிருக்கிறது: ஆகையால் நமது இனமாகிய பூதகணங்களும் அநேக நாட்களாக நரமாம்ஸ ஆகாரமேயில்லாமல், இதோ யிந்த சண்டாளிலமென்னும் குகையில் வருந்திக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்குமிந்த சந்தோஷ ஸமாசாரத்தைச் சொல்லுவோம்.

(மலைப்பிரதேசத்தில் குகையினின்று
பைசாசங்களும் பூதங்களும் வெளிவந்து
குதித்தாடுகின்றன.)

பாட்டு.

1. ருசியோடுபுலாலைப்புசியாமலே,
பசி மிகுதியினுல், பரிதபித்தோம்
கவலையைவிடுவீர், எனதுரைகேட்பீர்
வருகுது, பாரதயுத்தம், பெருகும்ரத்தவெள்ளம்,
கவலையைவிடுவீர், எனதுரைகேட்பீர்
பரிகரிநரமாம்ஸம்; தின்போம்நாம்.

பாட்டு.

பரபரப்புடன் நமதினமிங்குவந்தே
மனமகிழ்வுடன், குருதியை மிகக்குடித்தே
தலைகளைநரம்பினில், எலும்புடன் கோர்த்தே
கழுத்தினிலணிந்தே, களிப்புடனாடுவோம்.
வாச்சுதிந்தயோகம், நமக்கேற்றமாம்ஸபாகம்.
தலையோட்டைக்கையில் கொண்டு
புவியெல்லாமோசையே, முழங்கிடவே பர.

---

## அங்கம் 1. காட்சி 10.

## ஹஸ்தினபுர அரண்மனை அந்தப்புரம்

(த்ருதராஷ்டிரன், ஸஞ்சயன் ஸம்பாஷணை)

சுலோகம்.

த்ரு:— தர்மக்ஷேத்ரே, குருக்ஷேத்ரே
ஸமவேதா, யுயுத்ஸவஹ:
மாமகாப்பாண்டவாச்சைவ
கிமகுர்வத, ஸஞ்ஜய.

வ-ம்.—ஸஞ்சயா, அது, குருவம்ச ராஜாக்களாகிய எங்களால், பரிபாலித்த க்ஷேத்ரமாகையால், குருக்ஷேத்ரமென்றும், அநேக யாகாதிகள் நடந்ததால் தர்ம க்ஷேத்ரமென்றும் க்யாதி யடைந்தது. அந்த க்ஷேத்திரத்தின் மகிமை என்னவென்றாலோ, தர்மத்தையே வ்ருத்தி செய்யும். அங்கு ஒரு தர்மம் செய்தால், கோடி

தர்மமாகுமென்பது பெரியோர்கள் வாக்யம். ஆனதால், அங்கு யுத்தம்செய்ய நினைத்துக் கூடிய, என்னைச்சேர்ந்தவரும், பாண்டவாளும் என்ன செய்தார்கள். தர்ம பூமியாகையால் தர்மபுத்ரன் இந்த கோரமான யுத்தம் வேண்டாமென்று திரும்பிப் போய்விட்டானா? தர்ம க்ஷேத்ரமாகையால் இங்குதான் நமக்கு ந்யாயமும் ஜெயமும் கிடைக்குமென்று யுத்தம்செய்தானா? அல்லது துர்யோதனன் க்ஷேத்ரமஹிமையினால் அவர்களுக்குச்சேரவேண்டிய ராஜ்யத்தைக் கொடுத்துவிடத் துணிந்தானா?

ஸஞ்சயன்.—ராஜன்! பாண்டவர்கள் ஸைன்ய ஸஹாயமில்லாமல், யுத்தத்துக்கு வருவார்களென்று எதிர்பார்த்திருந்த துர்யோதனமஹாராஜா, பாண்டவர்கள், ஏழு அக்ஷோஹணி ஸைன்யங்களுடன் வரவும், தனக்கு பதினொரு அக்ஷோஹணி ஸேனைகளிருந்தும் ஸைன்யங்களில்லாததுபோல் தோன்றி, ஆசார்யனாகிய த்ரோணரிடம் சென்று தனக்கு ஏற்பட்ட சம்சயத்தைத் தெரிவிப்பதுடன் த்ருபதபுத்ரனையும் மற்ற சிறந்த சூரர்களையும் அங்கிருப்போர் பதினேழுபேர்கள் பீமார்ஜுனர்களுக்குச் சமான சூரர்களென்றும் அங்கு அந்த ஸைன்யங்கள் பீமனால் ரக்ஷிக்கப்படுவதென்றும்,

இங்கு தனது ஸைன்யங்கள் பீஷ்மரால் ரக்ஷிக்கப்படுவதென்றும், பீஷ்மர் ஸேனாதிபதிபட்டம் பெறும்போதே தான் பாண்டவர் ஐந்துபேரை மாத்திரம் கொல்லமாட்டேன், மற்ற யாவரையும் கொல்வேனென்று ஸேனாதிபதியானார் என்றும் கூறினான். அங்கு பீமனுடைய சபதமென்னவென்றாலோ துர்யோதனாதியர் நூறு பேரையும் கொல்வேனென்று தீர்மானித்திருக்கிறான். துரியோதனன், யுத்த ஸமயமாகையால் தன் எண்ணத்தை முழுதும் காட்டினால் இவர்களுக்கு யுத்தத்தில் அச்ரத்தை உண்டாகுமென்று நினைத்து முக்யமாய் பீஷ்மரையும் ரக்ஷித்துக்கொள்ளவும் என்று உத்தரவு செய்தான். துரியோதன மஹாராஜாவின் மனதில் வெளியில் சொல்லமுடியாத சங்கடமும் உண்டு.

த்ரு:—ஸஞ்சயா? நமது புத்ரனென்று சொல்லவேண்டியதிருக்க, அடிக்கடி துர்யோதனமஹாராஜா வென்று சொல்லுகிறாயே? ஏன்?

ஸஞ்:—தமது குமாரன், தன்னை மஹாராஜாவாக ஸதா நினைத்ததால் உண்டான கஷ்டங்கள் தான் இவையெல்லாம், எவ்வளவோ பெரியோர்களிருக்க சுயேச்சையாய் நடந்தது பாபந்தானே?

த்ரு:—ஸஞ்சயா? துர்யோதனன் மனதில் வெளியில் சொல்லமுடியாத சங்கடமென்று சொன்னுயே-அது என்ன சொல்?

ஸஞ்:—துரோணரைப் பார்த்து, மஹா ஸங்கடத்தோடு "பவான்" என்றான். நீ துரோணன், உன்னைக் கொல்ல யாகம் செய்து புத்ரனைப் பெற்றதைத் தெரிந்தும் த்ருஷ்டத்யும்னனுக்கு ஸம்பூர்ணமாக வில்வித்தைகளைச் சொல்லி வைத்த மஹாபாபி. என் போஷணையிலிருந்து கொண்டே அர்ஜுனனுக்குச் சமானமானவன் ஒருவனும் இருக்கக்கூடாதென்று வித்யாதானம் செய்த த்ரோஹி. எனக்கு ஸஹாயம் செய்யவிருந்த ஏகலைவன் விரலைக் குரு காணிக்கையாய் வாங்கின வஞ்சகன்; த்விஜோத்தமன்; இருபிறப்பாளன். ஆகையால் நிமந்த்ரணைக்குத் தகுந்தவனே தவிர யுத்தத்துக்கு அருகனல்லவென்று த்ரோணரைப்பற்றி நினைத்தான். பீஷ்மரைப்பற்றி நினைத்த தென்னவெனில்; பஞ்சபாண்டவர்களைக் கொல்லமாட்டேனென்ற பக்ஷபாதி. இவர் எனக்கு ஸேனாதிபதி; இவரால் எனக்கு க்ஷேமம் எப்படி உண்டாகும்? கர்ணன் இந்திரனிடம் சக்தியைப்பெற்றிருந்தாலும் எதுவும் சமயத்தில் உபயோகப்படாதென்று பரசுராம

ரிடம் முன்பே சாபம் பெற்றவன். க்ருபாசார்யர்-த்ரோணாசார்யரைப்போல் அவரும் ப்ராம்மணர்தான். அஸ்வத்தாமா-இவருக்கு ப்ரும்மசிரஸினுடைய உபஸம்ஹாரம் தெரியாது. அர்ஜுனனை மீறிப் போகக்கூடாதென்று புத்ரனையும் வஞ்சித்தான் த்ரோணன். விகர்ணன் - இவன் நீதிமானுகையால் இவனுல் நமக்கு கேடே ஸம்பவிக்கும். ஸௌமதத்தன் - இவன் பாண்டவர்களை ஜெயிக்கத் தவம் செய்ய, சிவன் ப்ரத்யக்ஷமாக, இவன் எழுந்திராமலிருந்ததால், சிவன் இவனை யுத்தத்தில் க்ரூர மரணமடைவாயென்று சபித்தார்; ஜெயத்ரதன்; பாண்டவர்களை ஜெயிக்க வரம் பெற்றாலும் அர்ஜுனனைத் தவிர என்று வரம் பெற்றவன். இதர ராஜாக்கள்; இவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்துதான் யுத்தம் செய்யவேண்டும். தனித்தனி யுத்தம் செய்ய சமர்த்தரல்லர். ஆயினும் தன்பொருட்டு உயிரை விடவும் தன்னை எமபுரத்துக்கனுப்பவும் ஸித்தமாயிருக்கிறார்களென்றே நினைத்தான்.

த்ரு:—ஸஞ்சயா? என் புத்ரனின் துக்கமான சங்கதிகளை ஸஹஜமாய்ச் சொல்லுகிறாயே?

ஸஞ்:—மஹாராஜா! வ்யாஸபகவான், நடப்பதும் பேசுவதும் அவர்கள் அந்தரங்கத்தில் நினைப்

பதும்கூட தெரியும்படி அனுக்ரஹித்திருக்கிறார். தங்கள் உத்தரவு எப்படியோ அப்படியே செய்கிறேன்.

த்ரு :—ஸஞ்சயா ! ஒன்றையும் ஒளியாமல் சொல்ல வேண்டும். ஆனல், பிறகு என்ன நடந்தது.

ஸஞ் :—பீஷ்மர் ஸிம்மநாதஞ்செய்து சங்கம் பூரித்தார். மற்றவர்களும் சங்கங்களும் பேரிகைகளும் முதலான வாத்யங்களை ஆரம்பித்து வாசித்தார்கள். பெரும் சப்தமுண்டாச்சுது. இதைக்கேட்ட பாண்டவர் ஸைன்யத்தில் கிருஷ்ணன் பாஞ்ச ஜன்யமும், அர்ஜுனன் தேவதத்தமும், தர்மர் அனந்தவிஜயமும், பீமன் பௌண்ட்ரமும், நகுலன் ஸுகோஷமும், ஸஹாதேவன் மணிபுஷ்பகம் என்னும் சங்கங்களை எடுத்துப் பூரித்தார்கள். மற்றவரும் சங்கங்களும் மற்ற வாத்தியங்களும் வாசிக்க, இந்த தொனி மூன்று லோகங்களிலும் நடுங்கும்படி கேட்க, துர்யோதனுதியாருடைய ஹ்ருதயத்தையும் பிளந்தது. இது நான் மாத்திரம் சொல்வதல்ல, எல்லோருக்கும் தெரிந்த விஷயம். பிறகு அர்ஜுனன் கிருஷ்ணபகவானுக்கு உத்திரவு செய்தான் தன் ரதத்தை இரண்டு ஸைன்யங்களுக்கும் மத்தியில் நிறுத்தும்படி. பகவான் அப்படியே செய்ய, அர்

ஜுனன் பீஷ்ம த்ரோணர்களைப் பார்த்து யுத்தத்தில் வந்திருப்பவர் எல்லோரும் தன் பந்து ஜனங்களே ஆகையால், க்ருஷ்ணனிடம் யுத்தம் வேண்டாமென்று சொல்லி ரதத்தின் மத்தியில் துக்கத்தோடு வில்லையும் பாணங்களையும் கைவிட்டு மோஹமடைந்தான்.

த்ரு :—ஆனல் யுத்தம் நடக்காதுபோல் தோன்றுகிறது. என் தம்பி பாண்டுராஜன், மஹா சாது அல்லவா? பாண்டவர்கள் அவன் புத்ரர்களல்லவா?

ஸஞ் :—இதற்குள் நாம் எப்படி முடிவு சொல்ல முடியும்? க்ருஷ்ணபகவானுடைய சங்கல்பம் எப்படியோ அப்படித்தானே முடியும்.

த்ரு :—ஆனல் சரி.

---

அங்கம் 1] 2-வது 3-வது அத்யாயங்கள் [காட்சி 11.

## 2. ஸாங்க்யயோகம். 3. கர்மயோகம்.

(யுத்தரங்கம் : ரதத்தில் கிருஷ்ணர்ஜுன சம்வாதம்.)

க்ரு :—அர்ஜுன! யுத்தத்திற்கென்றுவந்து, அற்பரால் ஆச்ரயிக்கத் தகுந்ததும், அபகீர்த்திக்கு ஹேதுவானதும், மோக்ஷவிருத்தமானதுமான இந்த துக்கம், சாஸ்திரோக்த, ஸதாசார ப்ரவர்த்தகனுன உனக்கு இந்த அகாலத்தில் ஏன்

ஏற்பட்டது. யுத்த ஆரம்பத்திற்கு முன்னமே வேண்டாமென்று நினைத்திருந்தால், ஸகாலமாரும். ஹே, பரந்தபா! சத்துருக்களை யுத்தத்தில் தபிக்கச் செய்யும் வீரனே! ஹ்ருதய தௌர்ப்பல்யத்தை விடு. குலதர்மம் செய்யாவிடில் பாபமென்று சொல்லினையே. அப்படியே, ஸகல கர்ம பலனையும் பகவதர்ப்பணம் செய்து, மமதை யில்லாமல் உன் ஸ்வதர்மமாகிய யுத்தமே செய். எடு வில்லை.

அர்:—ஹே மதுஸூதனா, யுத்தம் செய்யலாம். புஷ்பங்களாலே பூஜிக்கத் தகுந்தவர்களாகிய, பீஷ்மத்ரோணர்களை பாணங்களால் நான் எப்படி அடிப்பேன், இதைவிட பிக்ஷையெடுத்து ஜீவிப்பேன்.

க்ரு:—அவர்கள் உங்களுக்கு த்ரோஹியாகிய, துரியோதனனுக்குதவியாக ப்ரத்யக்ஷமாய் ஆயுதங்களோடு உங்களைக் கொல்லவந்திருப்பதைப் பார். ஆகையால் அவர்களை அவஶ்யம் முதலில் கொல்லவேணும்.

அர்:—ஸ்வாமீ! அவர்களே, என்னைக் கொல்லட்டும். ஜீவிப்பதனால் என்ன பலன்?

க்ரு:—அப்படி நினையாதே. எண்பத்துநான் குலக்ஷம் ஜீவராசிகளில் மனுஷ்யதேகம் துர்லபமானது.

சரீரமாத்யந்தம், தர்மஸாதன மென்பதால், சரீரத்தைக் காப்பாற்றிக் கொள்ளவேணும். இந்த சரீரமிருக்கும்போதுதான் ஞானத்தை சம்பாதித்து பகவானை அறியக்கூடும். அவர் கடாக்ஷத்தால் மோக்ஷமடையவும் ஏற்படும்.

அர் :—ஸ்வாமீ, தாங்கள் சொல்வதுபோல், இவர்களைக் கொன்றால் மோக்ஷஹேது ஒன்றும் கிடைக்காது. அர்த்த காமங்கள்தான் லபிக்கும். இந்த அர்த்த காமங்கள் இரண்டும் நம்மோடு வருவதல்ல.

க்ரு :—யுத்தம் செய்யாவிடில், ஸ்வதர்மம் செய்யாத பாபம் கட்டாயம் உண்டாகும்.

அர் :—யுத்தம் ஸ்வதர்மமாகையால், புண்யம். பிறரை ஹிம்ஸிக்கவேண்டியிருப்பதால் பாபம். பிக்ஷை எடுப்பது ஹிம்சையில்லாததால் புண்யம், பர தர்ம மாகையால், பாபம். இரண்டிலும் புண்ய பாபம் கலந்தேயிருக்கிறது. இந்த இரண்டில் எது செய்யலாம் ?

க்ரு :—அர்ஜுனா, நல்ல ஸமயம். தர்ம ஸந்தேஹத்தைத் தெரிந்துகொள்ளவா யிங்குவந்தது ?

அர் :—ஆனால், யுத்தம் செய்கிறேன். ஜெயம் எனக்கே உண்டாகுமா ?

க்ரு :—நீயே யோசித்துப்பார்.

அர் :—நாம் தான் ஜெயிப்போமோ? அல்லது நம்மை அவர்கள்தான் ஜெயிப்பாரோ? ஆக, எந்த பந்து ஜனங்களிறந்தால், நாம் ஜீவிக்கோமோ அந்த துர்யோதனதியர்தான் ஸேனைக்கு முன்னிற்பவர். ஸ்வாமீ

சுலோகம்

கார்ப்பண்ய தோஷோப ஹதஸ்வபாவஹ
ப்ருச்சாமித்வாம் தர்மஸம்மூட சேதாஹா
யச்ரேயஸ்யாந் நிச்சிதம், ப்ரூஹிதன்மே
சிஷ்யஸ்தேஹம். சாதிமாம் த்வாம் ப்ரபன்னம்.

வ-ம்.—ஹே, ஜகத்குரோ! கார்ப்பண்ய தோஷத்தால், என் ஸ்வபாவமெல்லாம் மாறிப்போச்சுது. தர்மா தர்மவிபாகம் தெரியவில்லை. என்னை அனுக்ரஹித்து ப்ரபன்னனுகை, கடாக்ஷிக்கவும்.

க்ரு :—குரு, சிஷ்யர்களில் குருவை சோதிக்கும் சிஷ்யன் ஒருவன். உபதேசம் பெறும் சிஷ்யன் ஒருவன். இந்த இருவரில் நீ எப்படி?

அர் :—"சாதிமாம் த்வாம், ப்ரபந்நம்." ஸ்வாமீ, என்னை ஆக்ஞாபிக்கவேணும். எனக்கு நித்ய ச்ரேயஸ்ஸை தருவதெதுவோ அதையே, போதிக்கவேணும். தங்களையே ஸதா சரணடைந்தவன். தங்களைத் தவிர என் மனதை நல்வழியில் திருப்ப ஒருவராலும் முடியாது.

தங்களை யல்லால் இந்த லோகமும் சரி, தேவ லோகமும் சரி, ஸத்ய லோகமானாலும் நான் விரும்பமாட்டேன். ஸத்யலோகமும், ப்ராக்ருத மானதே. த்ருகுண ஸம்மந்தப்பட்டதே.

க்ரு:—

சுலோகம்

**அசோச்யாநந்வ சோச்சஸ்த்வம்**
**ப்ரக்ஞ்யா வாதாம்ச்ச பாஷஸே**
**கதா ஸூநக தாஸூம்ச்ச**
**நானு சோசந்தி பண்டிதாஹா.**

ஸ்ம.—அர்ஜுனா? நீ பேசும் வார்த்தைகள் பண்டிதனைப் போலவும், செய்கை யனுஷ்டானங்கள் மூடனைப்போலு மிருக்கிறது. இன்னும்

சுலோகம்

**நத்வே, வாஹம், ஜாதுநாஸம்**
**நத்வம் நேமே, ஜநாதிபாஹா**
**நசைவ, நபவிஷ்யாமஸ்**
**ஸர்வே, வயமத: பரம்.**

அர்ஜுனா, நானும் நீயும், இந்த அரசர்களும் மற்றுமுள்ளவர்களும், பூதபவிஷ்ய வர்த்தமான காலங்களிலுமுண்டு.

அர்:—ஸ்வாமி, பீஷ்மத்ரோணர்களைப் பற்றியாவது துக்க முண்டாகாதா?

க்ரு:—ஆத்மா நித்யம். அதற்கு ஒருநாளும் அழிவு உண்டாகாது.

அர் :—ஆத்மாவுக்காக வேண்டாம். அவர்கள் சரீரத்தைப் பார்த்துத்தானே, பாட்டன் ஆசார்யனென்று பூஜித்துவந்தேன். சரீரம் போகுமே?

க்ரு :—அர்ஜுனா, நீயே சொல்லியிருக்கிறாய். அவர்கள் மஹானுபாவர்களென்று. இந்த சரீரம் போனால், உத்தமமான வேறு சரீரம் வரும்.

அர் :—ஸ்வாமீ, அவர்களுக்காக அல்ல. எனக்கே துக்கமுண்டாகுமே?

க்ரு :—அர்ஜுனா? 'எனக்கு' 'என்னுடையது' 'நான்' என்கிற மமதையை விடு.

அர் :—"நான்" என்கிற மமதையை விட்டால் என்ன ஆகும்?

க்ரு :—"நான்" என்கிற மமதையை விட்டவன் மோக்ஷ அருகனாவான். ஆகையால் உன் ஸ்வதர்மமாகிய, யுத்தமே செய்.

அர் :—க்ருஷ்ணா, நான் யுத்தம் செய்யவேணுமென்று உனக்கேன் இவ்வளவு ச்ரத்தை?

க்ரு :—ஹே, பாரதா! பரதகுலோத்தமனே, நீ இந்த குலத்தில் பிறந்ததற்கு உன்னாலேயே, இந்த பாரதப்போர் ச்லாக்யமடைய வேண்டுமென்பதுதான், வேறு யெனக்கென்ன?

அர் :—ஸ்வாமீ! சரீரத்துக்கு ஜனன மரணுதி தோஷங்களிருக்கின்றவே?

க்ரு :—இருந்தாலும் ஆத்மாவுக்கு ஸம்மந்தமில்லை.

அர் :—ஐயோ, பீஷ்மத்ரோணர்கள் போவார்களே.

க்ரு :—நசித்த யிந்த சரீரம் விட்டு நூதன சரீரம் அடைவார்கள்.

அர் :—சரீர ஆத்மாக்களுக்கு எல்லோருமே துக்கப் பட, யென்னை மாத்திரம் ஏன் கோபிக்கிறீர். வஸிஷ்டர், புத்திர சோகத்தால் வியஸனிக்க வில்லையா?

க்ரு :—வியஸனிப்பவர்கள் மூடர்தான். ஆனல், வஸிஷ்டர் வியஸனிப்பது தகாதென்று தெரிந் தும், இந்த மாயயை ப்ரம்ம மானஸ புத்ரரான தானும் கடக்கமுடியவில்லையே என்று தெரிந்து விசனித்தார். ஆகையால், அவருக்குச் சமான மாக உன்னை நினையாதே.

அர் :—ஆனல், என் மூடத்தனத்திற்கு நீர் தான் காரணம்; குரு நன்ருய்ப் போதித்தாலல்லவா சிஷ்யனுக்கு ஞானம் உண்டாகும்.

க்ரு :—அர்ஜுனு, நல்ல குருவினிடம் வித்தை கற்ற வன் மூடனுனல், குருவின் தப்பென்ன யிருக் கிறது?

அர் :—ஆம் என் மூடத்தனத்தான் பிறரை நோகு கிறேன்.

க்ரு :—அர்ஜுனா, உன் மூடத்தனமுமல்ல; விஷயம் பெரிது. எப்பேர்ப்பட்டவரும் ச்ரமப் பட்டுத் தானிதைத் தெரிந்துகொள்ள வேணும். ச்ரமத்துக்குத் தகுந்த ஸுகமும் உண்டு. ஆகையால் அந்தக்கரண சுத்திக்காக, ஸ்வதர்மமாகிய யுத்தமே செய்.

அர் :—நிவர்த்திகர்மாசெய்து ஞானமடைந்தவர் எப்படி யிருப்பார்? அந்த ஞானியின் லக்ஷணமெப்படி?

க்ரு :—ஸகல ப்ராணிகளுக்கும் இரவு, ஞானிக்குப் பகல். ப்ராணிகளுக்குப் பகல், ஞானிக்குஇரவு. ப்ராணிகளுக்கு, ஸதாத்யானம் சப்தாதி விஷயங்களில், ஞானிக்குப் பகவத்தேகத்யானத்தில். ஸமுத்ரம் இதர நதிகளின் ஜலத்தைக் கோறாததுபோல, ஞானி எதையும் கோரமாட்டான். அவனே மோக்ஷ ஸுகத்துக்கு அருகன்.

அர் :—இந்த விஷயம், அந்தோ! கொஞ்சகாலத்துக்கு முந்தியே தெரிந்திருக்கலாகாதா? காலமெல்லாம் வீண் காலமாகப் போச்சுதே.

க்ரு :—அர்ஜுனா? இந்த ஸ்திதி அந்திமத்தில் லபித்தாலும் மோக்ஷமே. கட்வாங்க மஹா

ராஜன் தன் ஆத்மா நீங்க ஒரு முகூர்த்தகாலந் தானிருக்கிறதென்ற ஸங்கதி தெரிந்து ஒரு முகூர்த்தத்தில் ஞான நிலையை அடைந்து, மோக்ஷமடைந்தான். உனக்குக் கவலைவேண்டாம். நன்மையே உண்டாகும். இனி கர்ம யோகம் சொல்லுகிறேன்.

அர் :— சுலோகம்

ஜ்யாயஸீ, சேது, கர்மணஸ்தே
மதா புத்திர் ஜனார்த்தன
தக் கிம், கர்மணி கோரே மாம்
நியோஜயஸி கேசவ ?

ஜனார்த்தன ? கர்மாவைவிட ஞானமே ச்ரேஷ்டமானல், கோரமான கர்மாவையேன் செய்யச் சொல்லுகிறாய். உனக்குப் பந்துவாகவும் சிநேகிதனாகவும், சிஷ்யனாகவுமிருக்கும் எனக்கு சிரேஷ்டமான ஞானத்தையே போதிக்கப்படாதா ?

க்ரு :— சுலோகம்

லோகேஸ்மின் த்விவிதா நிஷ்ட்டா
புராப்ரோக்தா, மயாநகா
ஞ்யானயோகேண ஸாங்க்யானாம்
கர்மயோகேண யோகிநாம்.

அர்ஜுனா ? உனக்கு, ஸாங்கியயோகம், அதற்கு நீ அருகனல்ல. கர்மாதான் செய்ய வேண்டுமென்று சொன்னேன். இனி உன்

விஷ்ட மெப்படியோ அப்படி செய்துக்கொள்.
ப்ரம்மருத்ராள் கூட ஸ்தானந்தத்தை விட்டு
என் ஆக்ஞைப்படி ச்ருஷ்டி ஸம்ஹாரங்களென்
னும் கர்மாவைச் செய்துக்கொண்டுதானிருக்
கிறார்கள்.

அர் :—தாம் சொன்ன கர்மாவையே செய்யவேண்டு
மென்று என்ன அவச்யம்: அப்படியும் சங்கம்
பூரித்தேனே ?

க்ரு :—கௌந்தேயா ! என் அத்தையாகிய குந்தி புத்
ரனே ! உன்னால் பூபாரம் நாசமாக வேண்
டாமா ? அப்படிச்செய்து பகவன் முகோல்லா
சம் பெறவேண்டாமா ?

அர் :—கேசி என்னும் அஸுரனைக் கொன்ற ஹே
கேசவா ! தாங்கள் நினைத்த மாத்ரம், பூபாரம்
நாசமாகாதா ? அதற்கு என் ஸஹாயமும்
வேண்டுமோ ?

க்ரு :—அர்ஜுனா ? துல்யமான க்யாதியடைந்த
உன்னால்தான் அது ஆகவேண்டும். என்
தங்கை ஸுபத்ரையின் பதியல்லவா நீ ?

அர் :—க்ருஷ்ணா ! கர்மா கெட்டதென்று சொல்லி
னையே.

க்ரு :—ப்ரயோஜனத்தை விரும்பிச் செய்யும் கர்மா
கெட்டதென்றேன். யக்ஞார்த்தமான நிவர்த்தி

கர்மா செய்வதால் புத்தி நிலைத்து கர்மேந்திரிய ஞானேந்திரியாதிகளை அடக்கி மனஸினுல் நியமித்து, பகவத் குணங்களில் சேர்த்து, அதனுல் ப்ராசீன கர்மா நசிக்க பிறகு ஞானம் உண்டாகும். ஞானமே மோக்ஷஹேது. அப்படியல்லாமல், மனதை சுயேச்சையாக விடலாகாது. மனமே மோக்ஷத்துக்கும் பந்தத்துக்கும் காரணம்.

அர் :—ஸ்வாமீ, இவையெல்லாம் உம்மபிப்பிராயமா? சாஸ்த்ரீயமா ?

க்ரு :—ஸர்வேஸ்வரன் ஆக்ஞை. தேவர்களும் த்ருப்தியடைவார்கள்.

அர் :—தேவதா ப்ரஸாதம் எனக்கு வேண்டாம்.

க்ரு :—லோக க்ஷேமத்திற்காகவாகிலும் கர்மாவைச் செய்.

அர் :—எனக்காகச் செய்துகொள்ளாதவன், இனி லோகத்திற்காகச் செய்வேனே ?

க்ரு :—அப்படிச் செய்யாதவன் மஹாபாபி. அவன் ஜென்மம் வ்யர்த்தம். அவனிருப்பதிலும் இறப்பதே நலம். பசு ஜீவிப்பதனுல் ச்லாக்யம், புலி ஜீவிப்பதனுல் என்ன ப்ரயோஜனம்?

அர் :—ஸ்வாமீ, சௌனகாதிய மஹரிஷிகள் காலந் தவருமல் நித்ய கர்மாக்களைச் செய்தார்களா ?

க்ரு :—பகவத்யானத்திலிருந்தபடியால், அது ஸமயம் கர்மா செய்யவில்லை. கர்மாவுக்குமேற்பட்டது பகவத்யானம். அந்த ஸ்திதிக்கு நீ வந்தபிறகு கர்மாவை விடலாம்.

அர் :—எங்கள் முன்னோர்கள் யாராகிலும் கர்மா செய்தார்களா ?

க்ரு :—ஆம். ஜனகன், அம்பரீஷன், பகீரதன், ப்ரியவ்ருதன், அச்வபதி முதலானவர் செய்திருக்கிறார்கள்.

அர் :—அவர்களுக்கு ஞானமில்லை, செய்தார்கள். நான் ஞானி, செய்யமாட்டேன்.

க்ரு :—நீ ஞானியானாலும், லோகத்தவரும் நல்வழிப்பட உன் ஸ்வகர்மத்தைச் செய். நீ செய்தால் தான் எல்லா ப்ராணிகளும் செய்யும். உன் அண்ணன் தர்மபுத்ரனும் சங்கம் பூரித்தாரல்லவா ? அவர் எவ்வளவு வேதாந்தி. அவரும் யுத்த கர்மா செய்தாச்சுது. இனி உன் ஜாதியர் கர்மா செய்தாராயென்று கேட்காதே. உன் ஸ்வகர்மாவாகிய யுத்தத்தையே செய்து. பலாபலனை பகவதர்ப்பணம் செய்துவிடு. பயஹேதுவும் பரதர்மமுமாகிய ஞானயோகம் வேண்டாம். அது தப்பினல் நரக ஹேது வாகும்.

அர் :—நிவர்த்தி கர்மா செய்தாலும் மனதில் ஆசையிருக்குமே ?

க்ரு :—அந்த ஆசைதான் சத்ருவென்றறி. அந்த சத்ருவைத்தான் ஸம்ஹரிக்க வேண்டும் மூன்று லோகத்திலும் எனக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை. லோகத்தின்பொருட்டு நானும் கர்மா செய்துக்கொண்டு தானிருக்கிறேன்.

---

**அங்கம் 1.]** **நான்காவது அத்தியாயம்** **[காட்சி 12.**

## ஞான யோகம் : சங்கரமடம்

(ஆச்சார்ய சுவாமிகள் மத்தியில் வீற்றிருக்க சிஷ்யர்கள் அவருக்கிருபுறமும் வீற்றிருக்கின்றனர்.)

குரு :—

தர்மக்ஷேத்ரே, குருக்ஷேத்ரே
ஸமவேதா யுயுத்ஸவஹ
மாமகாப், பாண்டவாச்சைவ
கிமகுர்வத ஸஞ்ஜயா.

நேற்றுவரையிலும் மூன்ருவது அத்யாயம் முடிந்தது. இன்று நான்காவது அத்யாயம். அதாவது ஞானயோகம்.

சுலோகம்

இமம் விவஸ்வதே யோகம்
ப்ரோக்தவானஹ மவ்யயம்
விவஸ்வான் மனவேப்ராஹ
மனுரிக்ஷ் வாகவே அப்ரவீது.

இந்த பகவத்கீதையானது பகவான் ஆதியில் சூரியனுக்குச் சொல்ல, சூரியன் வைவஸ்வத மனுவுக்குச் சொல்ல, மனு இக்ஷ்வாகுவுக்குச் சொல்ல, பரம்பரையாய் வந்தது. இந்த கீதை யின் தத்வம் நாசரஹிதமானது. வேதத்தி லிருந்து வந்தது. இதன் ஸாரத்தை ராஜர்கள், ரிஷிகள், ரிஷிகள்போலிருக்கும் ராஜர்கள் தெரிந்துகொண்டார். இதை ஸந்தேஹிக்கக் கூடாது. ஸந்தேஹித்தால் அபசாரம்.

சிஷ்யர்கள் :—சுவாமீ ! பகவான் முன்பு அவர்களுக் குச் சொன்னதை மறுபடியும், அர்ஜுன னுக்கு ஏன் சொல்லவேண்டும் ?

குரு :—ஜீர்ணோத்தாரம் செய்ய.

சிஷ் :—ஜீர்ணோத்தாரம் ஏன் செய்யவேண்டும் ?

குரு :— அவரே முன்பு சொல்லியிருப்பதால், அவ ருக்கே அந்த ச்ரத்தை யுண்டு. அதன் விஷயங் கள், மற்றவர் நன்றாய் அறியார்.

சிஷ் :—ஸ்வாமீ ! இவ்வளவு பெரிய விஷயத்தை நாங்களறிய சக்தியுடையவர்களா ?

குரு :—பகவத் கடாக்ஷத்தினால் அறியும் பாக்யம் உங்களுக்குண்டு. அதனாலேயே, க்ரந்த கால க்ஷேபத்திற்கு, இந்த மடத்துக்கு வந்திருக் கிறீர்கள். உங்கள் மனோதிடமே, ஸகல அர்த்

தங்களையும் அறியும் சக்தியையும் கொடுக்கும். சுவாமி அர்ஜுனனுக்குப் போதித்ததற்கு காரணம்,—நாராயண ரிஷி துடையில் பிறந்த ஊர்வசியென்னும் தேவதாசி அர்ஜுனனைக் கண்டு மோஹிக்க அவள் தன் தந்தையாகிய இந்த்ரனுக்கு ப்ரியமானவளென்று அவளை அவன் திரஸ்கரித்ததால், சுவாமி அர்ஜு னனை ஜிதேந்திரியன் என்று அறிந்து, 'பரந்தபா' வென்றழைத்தார்.

சிஷ்! :—ஸ்வாமீ! க்ருஷ்ணபகவானுக்கும், சூர்யன் காலத்துக்கும் வித்யாஸமிருக்கிறதே?

குரு :—நமக்கும் பகவானுக்கும் அனேக ஜன்மங்க ளுண்டு. நாம் முன் ஜென்மங்களின் ஸவிஸ் தாரம் அறியோம். பகவான் தன் அவதார ரஹஸ்யம் அறிவார், மாயை அவர் ஸ்வாதீன மாகையால், அவர் அவதார அந்தரங்கத்தை அறிவதுதான் ஞானம்.

சிஷ் :—அவர் எந்தெந்தக் காலங்களில் அவதாரம் செய்வார்.

குரு :— (சுலோகம்)

பரித் ராணய, ஸாதூனும்,
விநாசாயச, துஷ்க்ருதாம்
தர்மஸம் ஸ்த்தாப னார்த்தாய
ஸம்பவாமி, யுகே யுகே

குரு :—ஸாதுக்களுக்கும் ப்ராம்மணர்களுக்கும் கோக்களுக்கும் எப்போது, ஹிம்ஸை உண்டாகிறதோ அப்போது பகவான் அவதரித்து, துஷ்டர்களை நாசப்படுத்தி ஸாதுக்களுக்கு க்ஷேமத்தை உண்டாக்கி தர்மத்தை நன்றாய் ஸ்தாபிப்பார்.

சிஷ் :—சுவாமீ ! கர்ம ஞானங்களைப்பற்றி அனுக்ரஹிக்க வேண்டும்.

குரு :—கர்ம ஞானங்கள் பகவானை அடையும் உபாயங்கள். அதைத்தெரிந்தவன் தான் மோக்ஷத்துக்கு அருகன்.

சிஷ் :—எவ்வளவோ, நாளாய் நாங்கள் காலக்ஷேபம் கேட்டுக்கொண்டுதானிருக்கிறோம். எங்கள் ஒருவருக்காகிலும் மோக்ஷம் கிடைக்க வில்லையே ?

குரு :—பகவதனுக்ரஹத்தால், இகத்தில், ஸகல போகபாக்கியங்களையு மனுபவித்து, சரீர முடிவில் அவர் பதவியாகிய, மோக்ஷத்தையு மடையலாம்.

சிஷ் :—அப்படி யாராகிலும் அடைந்தவர்களுண்டா ?

குரு :—ஈச்வர ஸ்வரூப ஞானமென்னும் தபஸினாலும், யோகத்தினாலும், ஈச்வர ஸ்வபாவத்தை அடைந்தவர்கள் அனேகருண்டு.

சிஷ் :—அப்படியானல், எல்லோரும் ஏன் ஞானத்தை ஸம்பாதிக்க ப்ரயத்தனிப்பதில்லை.

குரு :—நிவர்த்திகர்மா செய்து, மோக்ஷமடைய பாக்யமில்லை. அவர்கள் செய்த பாபம் குறுக்கிடுகிறது.

சிஷ் :—சுவாமீ ! ப்ரவர்த்திகர்மா, நிவர்த்திகர்மாவின் விபரம் அநுக்ரஹிக்கவேண்டும்.

குரு :—லாபத்தையே கருதி தானே அனுபவிக்கக் கோரிச் செய்யும் கர்மா ப்ரவர்த்திகர்மா. ஒரு வித ஆசையுமில்லாமல் லாப நஷ்டங்களில் ஸம புத்தியோடு பகவதர்ப்பணமாகச் செய்யும் கர்மா, நிவர்த்தி கர்மா. நிவர்த்தி கர்மா செய்பவனுக்கு பகவத் ஸாங்கத்யமும் உண்டு.

சிஷ் :—இந்தப் பகவத்கீதை காலக்ஷேபம் கேட்க எந்தெந்த ஜாதியார் அதிகாரிகள்.

குரு :— (சுலோகம்)

**சாதுர்வர்ண்யம், மயாச்ருஷ்ட்டம்**
**குணகர்ம விபாக சஹ :**
**தஸ்ய கர்த்தாரமபி மாம்**
**வித்யகர்த்தார மவ்யயம் :**

வ-ம்.—ப்ரம்ம, க்ஷத்திரிய, வைச்ய, சூத்ரர்களென்னும் நான்கு ஜாதியாரையும் அவரே சிருஷ்டித்தார். ஆகையால் எல்லோரும் அவர்

குழந்தைகளே. ஸ்திரிகளோடு நான்கு ஜாதியரும் அனுஷ்டிக்கலாம்.

சிஷ் :—சுவாமி. எல்லோரையும் காப்பாற்ற பகவானுக்கு ச்ரமமாகாதா ?

குரு :—பகவான் அகர்த்தா. அவர் ஸங்கல்பத்தினலேயே அனயாஸமாக ரக்ஷிப்பார்.

சிஷ் :—ச்ருஷ்டி ஸ்திதி லயம் பகவான்தானே ?

குரு :—ஆம்.

சிஷ் :—அப்படியானல் ப்ரஜைகளைப் பல பேதங்களாக ச்ருஷ்டிப்பதால் அவருக்குப் பாபம் வராதோ ?

குரு :—அவர் என்ன செய்யலாம். அவரவர் பாப புண்யங்களுக்குத் தகுந்தபடியும், வேத சட்டப்படியும், ச்ருஷ்டியாகிறது. மோக்ஷ இச்சையுடைய முமுக்ஷுக்கள் நிவர்த்திகர்மாவையே செய்யவேண்டும்.

சிஷ் :—ப்ரஜைகள் இந்த பெரிய விஷயம் அறிய சக்தரா ?

குரு :—ப்ரஜைகளே அல்ல, இந்த விஷயத்தை அறிய பெரிய மஹான்களும் ப்ரமிப்பார். ஆசையுடன் கேட்டால் ஸுலபமாக அறியலாம்.

சிஷ் :—சுவாமீ! இந்த அத்தியாயத்தில் நாங்கள் முக்கியமாய்த் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயத்தை ஸுலபமாக சொல்லப் ப்ரார்த்திக்கிறோம்.

குரு :—கர்மா செய்யத்தகுந்தது, விகர்மா கொடுக்கக் கூடியது, அகர்மா செய்யக்கூடாதது, இந்த மூன்றையும் அறியவேண்டிய தவச்யம். கர்மா செய்யும்போது ஈச்வரன் செய்கிறானென்று நினைக்கவேண்டும். தான் செய்யாதபோதும், நித்திரையிலிருக்கும்போதும், ஈச்வரன் செய்துகொண்டே யிருக்கிறானென்று அறியவேண்டும். அப்படி அறிந்தவன் ஞானத்தை அடைவான்.

சிஷ் :—ஞான யக்ஞம், த்ரவ்ய யக்ஞம், முதலிய எல்லாவற்றிற்கும் பலன் ஒன்றுதானா?

குரு :—ஆம். ஒன்றேதான். இந்த யக்ஞங்களால் பாபத்தைப் போக்கடித்துக்கொண்டவர்களாவார்கள்.

சிஷ் :—சுவாமி, இந்த கர்மாக்கள் ஒன்றையும் செய்யாதவன் கதியென்ன?

குரு :—அவனுக்கு தர்மார்த்த காமங்களே இல்லாதபோது மோக்ஷமேது.

சிஷ் :—சுவாமீ, நிவர்த்திகர்மா செய்கிறான். அவன் ஸந்த்யாவந்தனதிகள் செய்யாவிட்டால் என்ன ஆவான்?

குரு :—அப்பா, நன்றாய்க்கேட்டாய், ஸந்தியாவந்தனாதிகள் செய்யாதவன் எந்த ஸத்கர்மங்களுக்கும் அருகனல்லான். அவன் கர்மப்ரஷ்டன். அவன் எந்தக் கர்மத்திற்கும் அனதிகாரி. ஸத்கர்மாசெய்வது ஞானத்திற்காக. கர்மா ஞான ஸாதனம். இது முக்யமென்று அறிய வேண்டும்.

சிஷ் :—சுவாமி, ஸுலபமாக மனதில்பட அனுக்ரஹிக்க வேண்டும்:

குரு :—ஸத்கர்மாவைச்செய்து, ஞானமடைந்து ஆத்ம ஞானமென்னும் அக்னியால் அக்ஞானமென்னும் சத்ருவை தஹிக்கவேண்டும். ஆகையால் எல்லோரும் அவரவர் ஸ்வகர்மாவையே செய்யவேண்டும். பக்த கோஷ்டிகளே, பகவான் முகோல்லாஸத்தையே கோருங்கள்.

பாட்டு.

ராகம்: ஹிந்துஸ்தானி மாண்டு. தேசாதி: தாளம்.

*சுத்த, ஸச்சிதானந்த பரப்ரம்மமே*
*சுகிர்தரான, சுகமுனீந்த்ர யோகிய ருணர் தர்மமே:*
*தத்துவ அதிதா, தத்ப்ரபோதா*
*தருண பாஸ்கரோ, தயசத்ரு சாப்ரகாசதன்யரான*
*ஸத்வ மௌனியர், மனதுறையும், விகாசா:*
*அத்வைத சாந்த, அமலவேதாந்த*
*அஞ்சலாகிற் குணதீத பெரும் ஜோதி: மறைகளோதும்*
*அகில ஆதாரமூலமாய் வளர் ஆதி (சுத்த)*

## இடைக்காட்சி: வீதி.

(சங்கர மடத்திற்குச் சென்று திரும்பிய மூன்று ஸ்திரீகளின் சம்பாஷணை.)

ஜானகி:—ராமு, சுவாமிகள் சொன்ன, கீதா காலக்ஷேபம், உனக்கு ருசித்ததா?

ராமு:—ஜானகீ, என்னடி அப்படிக் கேட்டாய். எனக்கு, குடும்பக்கார்யங்களும், வீட்டுத் தொல்லையும் இல்லாமலிருக்கலாகாதா, ஸதா கீதா புஸ்தகத்தையே பார்த்துக்கொண்டு இங்கு கேட்ட அர்த்தங்களை த்யானித்துக் கொண்டிருக்கலாமென்று தோன்றுகிறது.

ஜா:—ஆமடி கணவனுக்குப் பணிவிடை செய்யாமலிருக்க முடியுமா?

ரா:—அடீ. யாருக்கு யார். கடைசியில் பரமாத்மா ஒருவர்தான் பந்து.

ஜா:—அப்படி யல்லடி, பர்த்தாவை பூஜிப்பதுதான் ஸ்திரீகளுக்கு ஸ்வதர்மம், அதற்குமேல் ஸத்க்ரந்த ச்ரவணம். ஸத்க்ரந்த ச்ரவணத்தால் நமக்கு பதிபக்தி ஊர்ஜிதப்படும். புருஷர் பகவானுக்கு பரதந்திரர்போல், ஸ்திரீகள் தன் பர்த்தாவுக்கு பரதந்திரிகள்.

லக்ஷ்மி:—ராமு! ஜானகி சொன்னதுபோல் ஸ்திரீகள் பதியை அலக்ஷியம் செய்வதால், புருஷன்

ஸந்த்யாவந்தனம் செய்யாததால் எவ்வளவு பாபமோ அவ்வளவு பாபம் யிவர்களுக்கும் உண்டு. ஸந்த்யாவந்தனம் செய்யாத ப்ராம்மணனை வைதிகக் காரியங்களுக்கு உதவாதவனென்று எப்படித் தள்ளுவார்களோ அது போலே, புருஷரிடம் ப்ரீதியில்லாத ஸ்திரீகளின் கெதியுமாகும். ஸகஜ கர்மங்களைச் செய்தே தான் பிறகு விசேஷ கர்மங்களை அநுஷ்டிக்க வேண்டும். இது ஸ்திரீ புருஷர் இருவர்களுக்கும் ஏற்பட்டது.

ராகம்: ஹிந்துஸ்தானி. • தாளம்: ஆதி.

பத்மஜ ருத்ர முகாதிஸன்னுதம் பாபவிநாசிநம்
ஸ்ரீராமசந் த்ரம் பஜா: கௌஸல்யாஸூநும்
ராகவ மாசுநர (கௌ)

வாரிதி காந்தி விசோபிதகாயம்
வாரிஜ ஜாஸஹாயம்
நிர்க்கத மாயம் பஜ: (கௌஸல் யாஸூனும் ராகவ மாசுநர)

சார தேந்து ஸம, ஸுந்தரவதனம்
க்ஷீராப்தி சாயினம் காகாக்ஷிதானம் பஜா
(கௌஸல்யாஸூனும் ராகவ மாசுார:)

காதிஜ முனிவர, ஸுஸவன பாலம்
நக்தஞ்சராதிகாலம், ஜானகிலோலம் பஜா:
(கௌஸல்யாஸூனும் ராகவ மாசுநர:)

---

**கர்மஸந்யாஸயோகம்—த்யானயோகம்**

யுத்தரங்கம்: கிருஷ்ணார்ஜுன ஸம்வாதம்.

அர்:—க்ருஷ்ண! இரண்டு, மூன்று, நான்கு அத்தியாயங்களில் கர்மா செய்யச்சொன்னீர். 'நான்' 'எனது' என்கிற மமதையை விடச்சொன்னீர். ஆகையால் காமக்ரோதாதிகளை விடவேண்டுமா? அல்லது கர்மாவைச் செய்யவேண்டுமா?

க்ரு:—ப்ரவர்த்தி கர்மா விடவேண்டும். நிவர்த்தி கர்மா செய்யவேண்டும். ஞானம் உண்டாக ஸந்யாஸம் கூடாது. ஞானமடைந்தபிறகு ஸந்யாஸந்தான் முடிவுபெறும். ஞானமில்லாத போது ஸந்யாஸம் செய்பவன் மித்யாசாரன். அது கஷ்டமாகும். அதைவிட கர்மயோகம் செய்வாயாகில் மோக்ஷமடையலாம், ஸம்ஸயிக்காதே. ஸம்ஸயிப்பவன் ஒருபோதும் க்ஷேமத்தை யடையான்.

அர்:—ஆனல், நான் ஞானத்தையடைய வழியில்லை.

க்ரு:—அர்ஜுன! உனக்கல்ல, நீதான் நன்றாய்க் கேட்டுத் தெரிந்துகொள்ளுகிறாயே. உன் பொருட்டும் இனி உலகத்தின் பொருட்டும்.

அர்:—சுவாமி: நான் செய்யும் காரியம் நான் செய்ததாக நினைக்கக்கூடாது என்று சொல்கிறீரே, —ஏன்?

க்ரு:—நீ கர்த்த அல்லவே?

அர்:—ஆனல் ஜீவாத்மா அவ்வளவு குறைந்ததா?

க்ரு:—ஆம். ஜீவாத்மா பரதந்த்ரன், அப்படித் தெரிந்தவன் புத்திமான். பந்தத்தை அடையான்.

அர்:—ஸ்வாமீ! ஸகல கர்மாவும் யாரால் நடக்கிறதென்று நினைக்கவேண்டும்?

க்ரு:—நீ நித்திரை எழுந்தது முதல் இரவு சயனிக்கும் வரை, நீ செய்யும் ஸகல கார்யங்களும், உன்னல் நடக்கவில்லையென்றும், ஸகலேந்த்ரிய நியாமகனை பகவான் நடத்துகிறுரென்றும் அறிந்தால் நிவர்த்தி மார்க்கத்தில் உன் புத்தி செல்லும். இது தத்வம்.

அர்:—ப்ரஜைகள் யிப்படி நினைப்பார்களா?

க்ரு:—யோகிகள் ஆத்ம சுத்திக்காக ஸகலேந்திரியங்களின் பலா சக்தியை விட்டு யோகம் செய்துக் கொண்டுதானிருக்கிறுர்கள். இந்த ப்ராக்ருத சரீரத்துக்குத்தான், ஸுக துக்கங்கள் உண்டென்று நினைப்பதால் ஆத்மாவுக்கு ஸுகம் உண்டாகும்.

அர்:—க்ருஷ்ண! நீ சொன்ன பிறகே யிந்த ஸங்கதிகளெல்லாம் தெரிகின்றன. முன்னமே வன் தெரியவில்லை?

க்ரு :— (சுலோகம்)

வித்யா வினய ஸம்பன்னே
ப்ராம் மணே கவிஹஸ்தினி :
சுனிசைவ, ச்வ, பாகேச
பண்டிதாஸ் ஸம தர்சிநஹ :

அர்ஜுன? ஞானம் எல்லோருக்கும் உண்டு. உனக்கு அக்ஞானத்தினல் மூடப்பட்டது. எனக்கு அப்படி இல்லை. நீ ஸ்வகர்மாவை, நிவர்த்திகர்மாவாகச் செய்து ஞானமடைந்து ஞானக்னியினல் அக்ஞானத்தைத் தஹித்தால் ப்ரக்ருதிபந்த ரஹித சுத்தாத்ம ஸ்வரூபத்தை அடையலாம். அவன், ப்ராம்மணனை, பசுவை, யானையை, நாய், நாயைத்தின்னும் சண்டாளனையும் ஸமத்துவமாகப் பார்ப்பான். ஏனென்றல், எல்லாவற்றிலும் பகவான் இருப்பதினல், சரீர பேதங்களே தவிர ஆத்மா ஒன்றே யென்று நினைப்பான்.

அர் :—ஆனல், கர்மா செய்யவேண்டியது தானே?

க்ரு :— (சுலோகம்)

போக்தாரம் யக்ஞதபஸாம்
ஸர்வலோக, மஹேச்வரம்
ஸுஹ்ருதம் ஸர்வபூ தாநாம்
ஞாத்வாமாம், சாந்திம் ருச்சதி :

அர்ஜுன, அப்ரியமாகச் செய்யக்கூடாது. என்னை ஸ்நேகிதனுக நினைத்தாகிலும் செய்.

அல்லது பதினொன்று லோகங்களுக்கும் ப்ரபு என்று நினைத்தாகிலும் செய். ஸர்வ பூதங்களுக்கும் ஹிதத்தையே செய்பவனென்று என்னை அறிந்தால் தான் நித்ய ஸுகம் அடையலாம்.

---

## 6-வது அத்தியாயம்

## ஆத்ம சம்யம யோகம்.

யுத்தரங்கம் : கிருஷ்ணார்ஜுன சம்வாதம்.

க்ரு :—அர்ஜுனா! இந்த ஆறாவது அத்தியாயத்தின் அபிப்பிராயம்: இரண்டாவது அத்யாயம் முதல் ஐந்தாவது அத்யாயம் வரை கர்மா விஷயமாக நான் உபதேசித்தது, ஸர்வ கர்மாசெய்து அந்தக் கரண சுத்தியடைந்து பகவத்யானம் செய்யவே. ஒவ்வொருவரும் வர்ணாச்ரமத்துக்குத் தகுந்த கர்மா செய்தவனையே நித்ய ஸந்யாஸி யென்றும் யோகியென்றும் சொல்லலாம். அக்னி விட்டவன், ஸந்யாஸியாகமாட்டான். அக்னி யென்றால் பார்யாள் ஸஹிதமுள்ள அக்னியை விட்டமாத்திரம் ஸந்யாஸம் நிலைத்து விடாது. நித்ய நைமித்யாகாதி கர்மாவை விடுவதால் யோகியாக மாட்டான். காமக்ரோதாதிகளை ஜெயிப்பதுதான் ஸந்யாஸியின் லக்ஷணம்.

அர் :—இந்த கர்மாவை எவ்வளவுகாலம் செய்ய வேண்டியிருக்கும்?

க்ரு :—அந்தக்கரண சுத்தியாகும் வரையில். மேல் மெத்தையில் வஸிக்க எண்ணங்கொண்டவன் ஒவ்வொரு படியாய் ஏறித்தான் போகவேண்டும். மேல் மெத்தையின் ஸுகத்தை நினைத்து கர்மா செய்யவேண்டும். அந்த ஸுகத்தை அடைந்தபிறகு கர்மா அவச்யமிராது.

அர் :—எனக்கு த்யானம் ஸித்தித்ததென்று எப்படித் தெரியும்,

க்ரு :—மனஸு விஷயாதிகளிலும் கர்மங்களிலும் ஸம்மந்திக்காதபோது ஸகல ஸங்கல்பத்தையும் விட்ட யோகியென்றறியலாம்.

அர் :—இந்த மனஸை ஜெயித்தவனுக்கு என்ன லாபம் உண்டாகும்?

க்ரு :—ராக த்வேஷங்களைத் துலைத்தவன் மனதில் பரமாத்மா ஸுகமாக வீற்றிருப்பான்.

அர் :—ஆகிலும் ச்ரமமதிகம்.

க்ரு :—பலத்துக்குத் தக்க ச்ரமம்: உயர்ந்த ஸுகமடையலாம். ஸதா என்னிடம் வஸிக்கலாம்.

அர் :—எங்கு?

க்ரு :—பரமபதத்தில்.

அர் :—அப்படியானல் ஆகாராதிகளை நன்ருய்ச் சாப்பிடலாமோ ?

க்ரு :—மிதமான ஆகாரம், மிதமான தூக்கம், மித மான ச்ரமபரிஹாரம், எல்லாம் மிதமாக யிருந் தால் தான் துக்கத்தைப்போக்கும், த்யான யோகம் ஸித்திக்கும்.

அர் :—எனக்கு த்யானயோகம் ஸித்தித்ததென்று எப்படித் தெரியும்.

க்ரு :—உன் மனதை நிறுத்தினயிடம் நிற்கும்போது,

அர் :—த்யானயோகத்தில் அவ்வளவு ஸுகமா ?

க்ரு :—நாரதாதிகளைக் கேட்டால் சொல்வார்கள் நாச ரஹிதமான ஸ்ுகமென்று.

அர் :—ஸ்வாமீ, நான் அடிக்கடி ஸந்தேஹித்துக் கேட்பதால் கோபம் வேண்டாம்.

க்ரு :—அர்ஜுனு ? நீ ஸந்தேஹமறக் கேட்பா யென்று அறிந்துதான் உனக்குப் போதிக்கத் துணிந்தேன். ஞானயோகத்தினல், ஸித்தி பெற்றவன் சராசரப்ரபஞ்சமெல்லாவற்றிலும், பரமாத்மா விருப்பதாகவும், பரமாத்மாவிடம் எல்லா மிருப்பதாகவும், இதராருடைய ஸுக துக்கம் தனதாகவும், தனது ஸுக துக்கங்கள் இதராருடைய ஸுக துக்கங்களாகவும் நினைப் பான்.

அர் :—அப்படி பரிபக்குவமடைந்த புருஷனைத் தாம் என்ன செய்வீர்.

க்ரு :—அவனை நான் விடமாட்டேன். அவனும் என்னை விடமாட்டான். ஞானியில்லாவிடில் நானுமில்லை.

அர் :—க்ருஷ்ணா? உபதேசம் முடிந்ததா? கீதை எனக்கு வேண்டாம்.

க்ரு :—ஏன் அப்படிச் சொல்லுகிறாய்?

அர் :— (சுலோகம்)

சஞ்சலம் ஹி மன: க்ருஷ்ண
ப்ரமாதி பலவத் த்ருடம்
தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே
வாயோரிவ, ஸுதுஷ்கரம் :

வ-ம்.—ஸ்வாமீ, மனதை எல்லா விதத்திலும் அடக்கி ஸமத்வ நிலையில் நிறுத்த நினைப்பது முடியாத கார்யம். மனதை நிறுத்த முயல்வது காற்றைக் கையினால் பிடிப்பது போலாகும். ஐயோ மனம் பல சஞ்சலமுடையதல்லவா?

க்ரு :— (சுலோகம்)

அஸம்சயம் மஹாபாஹோ
மனோ துர்நிக்ரஹஞ்சலம்
அப்யாஸேந து, கௌந்தேய
வைராக்யேண ச க்ருஹ்யதே :

வ-ம்.—அர்ஜுனா! ஸந்தேகமில்லை. ஹே! மஹா பாஹோ! உனக்கே யிது கஷ்டமென்று தோன்

ரினதால் மற்றவர்க்கும் கஷ்டமென்றுதான் தோன்றும். அப்படி அல்ல. மனோ நிக்ர ஹம் என்பதை உன்னைப்போன்ற புத்திமான் கள் மனோ அநிக்ரஹம் என்று எடுத்துக் கொள்ளவேண்டும். எந்தக் கார்யமும் ப்ரவே சிக்கும்போது கஷ்டமாகத்தான் தோன்றும். ப்ரவேசித்த பிறகு ஸுலபமாகமுடியும். அப் யாஸத்தினாலும் வைராக்கியத்தினாலும் சாதிக்க லாம்.

அர் :—இந்த யோகம் செய்து முடியுமுன் மரண மடைந்தவன் கெதி என்ன ஆகும்?

க்ரு ;—அர்ஜுனா, நல்ல கேள்விதான். த்யான யோக முடியுமுன் மரணமடைந்தவன் நல்ல லோகங்களில் போய் வஸித்து பிறகு தனவந் தர்கள் வீட்டில் பிறந்து பூர்வ வாஸனையினால் மறுபடியும் யோகம் செய்ய ஆரம்பிப்பான். அல்லது ஏழைகளாகிய ஞானிகள் வீட்டில் பிறந்து ஞானியே ஆவான். நல்ல கார்யம் செய்தவன்-அப்பா-ஒருவனும் கெடமாட்டான்.

அர் ;—த்யானிக்கிறேன். யாரை த்யானிக்கவேணும்.

க்ரு :—என்னையே த்யானிக்கவேண்டும். தபஸைப் பார்க்கிலும், ஞானத்தைப் பார்க்கிலும், கர்மாவைப் பார்க்கிலும் த்யானமே ச்ரேஷ்ட மானதென்பது என்னபிப்பிராயம். அவன் தான் யோக்யன்.

## ஸ்ரீமத்வமடம்.

## விஜ்ஞான யோகம்.

(ஆசார்ய சுவாமிகள் மத்தியிலமர்ந்திருக்க அவருக்கிருபக்கங்களில் சிஷ்யர்கள் வீற்றிருக்கிறார்கள்.)

குரு—சிஷ்யர்—(எல்லோரும்): சுலோகம்.

தர்மக்ஷேத்ரே, குருக்ஷேத்ரே
ஸமவேதா யுயுத்ஸவஹ:
மாமகா: பாண்டவாச்சைவ
கிமகுர்வத ஸஞ்ஜய:

குரு:—முமுக்ஷுக்களே! மூன்றாவது அத்தியாயத்தில் கர்மயோகமும் ஆறாவது அத்தியாயத்தில் த்யானயோகமும் சொன்னேனல்லவா? கர்ம த்யானங்களே செய்யவேண்டும்.

சிஷ்:—செய்யலாம். ஆனால், மனம் சலிக்குமே?

குரு:—பகவானிடம் ப்ரீதியிருந்தால் சலிக்காது. கர்மா நிர்பந்தித்துச் செய்விக்கலாம். ஞானம் போதித்துத் தெரிவிக்கலாம். பக்திமட்டும் அதிக ப்ரீதியினால் உண்டாகும்.

சிஷ்:—அதற்கு உபாயம் தெரிவிக்கவேண்டும்.

குரு:—பகவானிடம் பக்தி உண்டாக ஸதா அவரை வர்ணிக்கவேண்டும். அவரே சகல லோகங்களுக்கும் பர்த்தா, பரிக்கிறவர், அவர் வேதத்

திற்கும் ப்ரம்மாவுக்கும் எட்டாதவரென்று ஸம்சயமில்லாமல் அறியவேண்டும்.

சிஷ்:—எதனால் அறியலாம்?

குரு:—எல்லாவற்றையும் பகவத்கீதையினாலேயே அறியலாம். இனி ஒரு க்ரந்தத்தைத் தேட வேண்டியதில்லை. எல்லாம் அதற்குள்ளேயே அடங்கியிருக்கிறது. இதன் தத்வம் ப்ருஹஸ்பதியினாலேயும் முழுமையும் அறிய முடியாதென்பது பெரியோர்கள் வாக்யம்.

சிஷ்:—சுவாமீ, பகவத் கல்யாண குணங்களைக் கேட்டு எல்லோருமே ஏன் மோக்ஷமடையக் கூடாது?

குரு:—ஸாமான்ய ஜனங்களுக்கு மோக்ஷத்தில் அபிருசி உண்டாகவில்லை. மனுஷ்யர்களில் ஆயிரத்தில் ஒருவனே பகவானை யதார்த்தமாகத் தெரிந்து கொள்கிறான். அவருடைய ப்ரபாவத்தை எல்லோருமே எப்படித் தெரிந்துகொள்ள முடியும்.

சிஷ்:—சுவாமீ. பகவானைச் சிலர்தான் அறிவதால் அவர் மகத்வம் சொற்பமாக இருக்கலாம்?

குரு:—அப்படியல்ல. நரகத்தில் அதிக ப்ராணிகள் இருப்பதால், பரமபதத்துக்குக் கௌரவம் குறையுமா? கரையின்றி நிற்கும் ஸமுத்ரத்தை

நினைத்துப் பாருங்கள். ப்ரம்மா முதல் ஸ்தம்ப பர்யந்தமுள்ள ஸகல வஸ்துக்களுக்கும் ப்ரபு ஒருவனேயானல் அவனை என்னென்று சொல்லலாம். அவனே ஒப்பாரும் மிக்காரு மில்லாதவனென்று அறியவேண்டும். கீதையில் அர்ஜுனனுக்கு நான்ஒருவனே யென்றும், 'நான்' நானென்றும், பகவான் பக்தர் பொருட்டு அவர் ஒருவர்தான் சொல்லலாம். இனி ஒருவர் சொல்லலாகாதென்று வேத சாஸ்திரங்களே சொல்லும். இதுவும் உங்களுக்கு ஞாபகமிருக்கவேண்டும்.

சிஷ் :—சுவாமீ, லோகம் தெரிகிறது. லோகத்தைத் தரித்த பகவானைத் தெரியவில்லையே ?

குரு :—கயற்றில் முத்துக்கள் கோர்த்ததுபோல் உலகமும், உலகத்திலுள்ள ஸகலமும் அவரிடம் கோர்க்கப்பட்டிருக்கிறது. முத்துக்கள் தெரிகிறது போல், உலகம் தெரிகிறது. கயறு தெரியாததுபோல் பகவான் தெரியமாட்டார். எந்த வஸ்துக்கள் எதனல் ப்ரகாசிக்கிறதோ, எல்லாம் அவரே. லக்ஷிமீ ஸமேதனய், உலகங்களைச் சிருஷ்டித்து வருகிருர்.

சிஷ் :—சுவாமி, பகவானை யறிய வெகு சுலபமான வழியாயிருக்கிறதே. ப்ராணிகளேன் அறியவில்லை ?

குரு:—அவர் த்ருகுணாதீதன். மூன்று குணங்களுக்கு மேற்பட்டவர். ஸத்வ ரஜஸ்தமோ குணங்களிருப்பவர். அவரைத் தெரிந்துகொள்ள முடியாது. மேலும் ப்ரக்ருதி ஒரு பக்கலிலும், அவர் ஒரு பக்கலிலும் இருக்கிறார். மத்தியில் திரை யிருக்கிறது. ப்ரம்மாவினாலும் அந்தத் திரையை விலக்க முடியாது.

சிஷ்:—ப்ரம்மாவினாலும் விலக்கமுடியாத கார்யமாகையால் கீதா காலக்ஷேபத்தைக்கேட்டு அடையும் பலன் என்ன ?

குரு:—ப்ராக்ருத ப்ரம்மாவினால் அவர் போட்ட திரையை விலக்க முடியாதென்பதினால் அப்ராக்ருதனான பகவானால் முடியுமென்றறிய வேண்டுமல்லவா ?

சிஷ்:—பகவானை த்யானிக்கும் யாவருமே புண்யாத்மாக்கள் தானா ?

குரு:—த்யானிக்கும் நால்வகையோரில், ஆர்த்தன் கஷ்டத்திலிருப்பவன், ஜிக்ஞாஸு ஞானமடையக் கோரினவன், அர்த்தார்த்தி த்ரவ்ய லாபம் கோரினவன், ஞானி எந்த ப்ரதிப்பிரயோஜனத்தையும் கோராமல் பக்தி செய்பவன். ஆகையால் ஞானியே ச்ரேஷ்டன். ஆத்மாயில்லாவிடில் சரீரம் நில்லாததுபோல் ஞானியில்லாவிடில் அவர் இருக்கமுடியாது. அவர்

அவனிலும், அவன் அவரிலும் கலந்தே இருப்பார்கள்.

சிஷ்:—அப்படி ஞானிகளாக நாங்கள் எப்போது ஆகுவோம்.

குரு:— (சுலோகம்)

பஹூநாம் ஜந்மநாமந்தே
ஞாநவாந்மாம் ப்ரபத்யதே
வாஸுதேவஸ் ஸர்வமிதி
ஸமஹாத்மா ஸுதுர்லபஹ:

வ-ம்.—அனேக ஜென்மங்களுக்குப் பின் ஸர்வமும் வாஸுதேவனென்னும் ஞானமுண்டாகும். அப்போதுதான் அவர் சேஷியென்றும், நாம் சேஷபூதனென்றும், அவர் சரீரியென்றும், நாம் சரீரமென்றும் பாவமுண்டாகும்.

சிஷ்:—இந்த்ராதி தேவர்களைப் பூஜிக்கலாமா?

குரு:—தேவர்களைப் பூஜிக்கலாம். மற்ற பலன்களைக் கொடுப்பார்களே தவிர, மோக்ஷம் கொடுக்கவல்லவர் பகவான் ஒருவர் தான்.

சிஷ்:—சுவாமீ, பகவானிடம் சிலர் பக்தியாயிருக்கிருர்கள். சிலர் அவரை மதியாமலிருக்கிருர்களே, அது ஏன்?

குரு:—அவரவர்கள் பூர்வ ஜென்ம வாசனையினல். அது பிறப்போடேயே வந்ததாகும். அதை மாற்ற முடியாது.

சிஷ் :—பகவானை பஜிப்பவர்கள் என்ன நிலையை அடைவார்கள் ?

குரு :—யார் ஜெனனமரணாதிகளை விட ப்ரயத்தனித்து வருகிறார்களோ, அவர்களே பரப்ரம்மத்தை யறிவார். அத்யாத்மக மறிவார். ஸமஸ்த கர்மமறிவார். யார் அதிபூதம், அதிதெய்வம், அதியக்ஞம் என்பதற்கு ஆதாரமாக அவரை யறிவாரோ அந்த யோகிகள் மரண காலத்திலும் அவரை அறிவார்.

(எல்லோரும் பாடுகிறார்கள்.)

ராகம் : கனடா.] [தாளம் : ஆதி.

ஸ்ரீதர வரமுகுந்தா, ஜெய கோவிந்தா
தேவாதிதேவ, விபவா, ஜெகதானந்தா
தீனஜன ஸஹாய, ஸுகுணாகர உசித (ஸ்ரீ)

மாதவர் தொழும் புனிதா, மறை மலர்ப் பாதா
மஹிமை மேவும் ஸுகீர்த விஹித பவரஹித (ஸ்ரீ)

## இடைக்காட்சி

(மத்வமடத்தில், உபன்யாஸம் கேட்ட மாத்வ ஸ்த்ரீகள் கன்னடத்தில் பேசுதல்.)

பத்மா :—ஆசாரு யேனு கேளிதரு.

பாகிரதி:—நாகு ஜாதிவரு அவரவரு ஸ்வதர்ம ஹேறங்கோ, ஹாங்கே, நடிபேக்குந்த ஹேளிதரு.

பத் :—நாவு ஹெங்கெஸரு ஆயிதே நமகே. யேனு கேளி தரு.

பாகீ :—ஹெங்கிகஸரு, பதிபக்தி, மாடபேக்கந்த ஹோளி தரு.

பத் :—ஐயோ நானு யேனு மாடலி. யெல்லி ஹோகலி. யாரென்ன, ஹிடியலி, பதிபக்தி மாடலகே. நானு, ஈ சிக்கவயஸிலேயே, நங்கயீ தெதிபந்துடு தல்ல. ஆதரே நம் மக்கன கெண் டன்ன கோடவேளே யெல்லா, நங்கே நன்ன கெண்டன்ன ஞாபக பர்த்ததே.

பாகீ :—ஞாபகதகூட பிட்டு பிடு, புத்தியன பிட்டு பிட பேட. கீதா காலக்ஷேப கேளித பல, வீணுகி ஹோகுட்து.

பத் :—யேனேம்மா. நன்ன கெதியென்ன ? நென ஸிதரே நங்கெ, திளியலாங்கே. நங்கே, துக்க பர்த்ததே.

பாகீ :—அளு பேடவே, அளுபேட. நீ சிக்கு வயஸ வளுயிஷ்டு நீ அத்ரே, நானு, பாளி, பெளகி, கெண்டன்ன, கொட்டவளிகே, நானு எஷ்டு அளபேகு யேனே அம்மா, வேளா வேளகே, யிஷ்டு திந்துட்டு ஆசார்கேளுவதன்ன, கேளி பிட்டு, புத்தி கண்டாங்க ஹோதரகூட, சௌது யிட்டு கிண்டு நன்ன காலன்ன, களி தேனே. தேவரிகே, யாவாகே நன்னமேலே, க்ருப பர்த்தயோ, திளில்ல், நீசிக்கு வயஸு வளு, ஹோங்குகால, களதூடுவி.

பத்மா :—யேனு கீதா காலக்ஷேப கேளாவரை புத்தியெல்லிஹோககே. ஆனந்தவாயிதே, மனெகி ஹோயி ராத்திரி ஆதரே, யேனு, ஆச்சர்யவோ யேனு அன்யாயவோ, நன்னகெண்டன்னத் பகவாயேயிருவுதெ.

பாகி :—ஸும்மனே, ஸும்மனே ஹீங்கே ஹேளுபேட நம், மனெயவரு, க்யாபக நங்கே, பர்த்ததே.

பாட்டு.

ராகம் : ஹிந்துஸ்தானி ப்யாக். தாளம் : ஆதி.

பாரே, பாரே, பாகீரதி,
பகவத்கீதைய, கேளோனு
கேளிகேளி, அதனிசெந்தவ, கண்ணுதல்லி நோடோணு.
க்ருஷ்ண, ஹேளித அர்ஜுனகேளிதா
கன்னெயாநடிசிதா, பகவத்கீதையா
ஆட்டவநோடி, ஹரிகளகருணெய
பாத்ரவாஹோணு!! பாரே பாரே!!

---

அங்கம் 1.] 8-வது அத்யாயம். காட்சி 15.]

அக்ஷரபரப்ரம்ம யோகம்.

யுக்தாங்கம் : க்ருஷ்ணார்ஜுன சம்வாதம்.

அர் :—க்ருஷ்ண, அந்தியகாலத்தில் உன் ஸ்மரணை ஏன் உண்டாகவேண்டும் ?

க்ரு :—என் ஸ்வரூபத்வார, என்னை அடைய : அதை விட்டு நாம்போனல், பார்யாபுத்ரர்களுடைய

கெதி என்ன ஆகுமோ என்று நினைப்பானே தவிர நான் சரீரத்தைவிட்டுப் போகிறேனே, என்கெதி யென்னவாகுமோவென்று நினைப்ப தில்லை. இதல்லாமல் எவ்வளவோசமத்காரமாக ஸம்பாதித்த தனம், ப்ரியமாகக் காப்பாற்றிய மனைவி மக்கள், பசுக்கள், சிநேகிதர்கள், பந்துக்கள் அல்லது தன் சொந்தமென்று நினைத்த இந்த தேஹங்கூட நீ போ, நான் வரமாட்டே னென்று ஸ்வஸ்தமாகப் படுத்துவிடும். கடைசியில் ஆத்மா ஒன்றுதான் தான்செய்த புண்ய பாபங்களோடு போகும். அப்போது ஸர்வேச்வரனைவிட கெதி இல்லை. நான்தான் நித்ய பந்து. அந்தியகாலத்தில் என்னை நினைத்தால் நான் காப்பாற்றுவேன்.

அர் :—க்ருஷ்ண, உன் ஸ்மரணத்திற்கும், மோக்ஷத்திற்கும் ஸம்மந்தமென்ன ?

க்ரு :—அந்தியகாலத்தில் எந்த வஸ்துவை நினைத்து ப்ராணனை விடுகிறானோ,அந்த ஸ்வரூபமே உண்டாகும்.

அர் :—க்ருஷ்ண; மரணகாலம் மஹா நுட்பமான ஸமயமல்லவா? கபவாத பித்தங்களால் ச்ரமப் படும்போது உன்னை நினைக்கமுடியுமா ?

க்ரு :—அதற்குத்தான் ஸதா என்னை பஜிக்கும்படி சொல்வது. அந்தியகாலத்திலும், வழக்கத்தி

ஞல், என் த்யானம் வரும் அல்லது ஸதா த்யா
னித்ததால் நானே கடாக்ஷித்து என் ஞாபகம்
வரும்படிச் செய்வேன்.

அர் :—சுவாமி, இனி எனக்கு கர்மஞானங்கள்வேண்
டாம். பீஷ்மத்ரோணர்களுக்காகத் துக்கமும்
இல்லை. யுத்தமும் வேண்டாம். தங்களை ஸதா
த்யானித்து வருகிறேன்,

க்ரு :—அர்ஜுனா ! நீ யுத்தம் செய்யாமலிருக்க முடி
யாது. என்னையே நினைத்து யுத்தம் செய். ஸம்
சயம்வேண்டாம், நன்மையே உண்டாகும்.

அர் :—இவ்வளவு ச்ரமப்பட்டுப் பரமபதம் வந்தால்,
மறுபடியும் ஜென்மங்களில் போகச்சொல்
வீரோ ?

க்ரு :— ஸ்லோகம்

ஆப்ரஹ்ம, புவநால் லோகா:
புநராவர்த்தி நோஅர்ஜுன
மாமுபேத்ய து கௌந்தேய
புனர்ஜென்ம நவித்யதே.

ப்ரம்மலோகம்வரை போனலும் மறுபடியும்
ஜென்மம் உண்டு. என்னிடம் வந்தவரை நான்
விடமாட்டேன். மறு ஜென்மமே கிடையாது.
அர்ஜுனா! ப்ரும்மச்ருஷ்டிக்குள் நீ ஒரு ச்லாக்ய
மானவன். ஏனென்ருல் நீ கேட்டகேள்விகளுக்
குச் சிறந்தகீதா சாஸ்திரமானயிதை ஸ்வயமாக

நானேசொல்வதால், உன்பாக்யமே பாக்யம். இனி உனக்கு வேதாந்த விசாரம் செய்யவேண்டிய அவசியமில்லை.

அர் :—ஆத்மாவை அதிகமாக வர்ணித்ததால் தாம் அதை விட விசேஷமென்ன ?

க்ரு :—ப்ரம்மாவுக்கும் ஆயுள்ப்ரமாணம் உண்டு. ப்ரம்மாவுக்கு ஆயிரம் யுகம் ஒரு பகல். ஆயிரம் யுகம் ஒரு ராத்திரி. அப்படி நூறு ஆயுள் அவர்கள் சரீரம் போகும்போதும் எனக்கு நாசமில்லை. நான் நாசரஹிதன்.

அர் ;—ஸகல சராசரங்களுக்கும் ப்ரபுவாகிய உன்னை எப்படிப்பட்ட சிறந்த வஸ்துக்கள் ஸமர்ப்பித்து அர்ச்சிக்கவேண்டுமோ என்று பயமாகிறது.

க்ரு :—அவாப்த ஸமஸ்த காமனுன எனக்கு உன்னுலாகவேண்டியது ஒன்றுமில்லை. என் பாதத்தில் விழுந்தால் எனக்கு கருணையுண்டாகும். மனப்பூர்வகமான பக்தியிருந்தால் போதும். வேறு ப்ரயோஜனம் கோரலாகாது.

அர் :—சுவாமி, எனக்கு மோக்ஷம் உண்டா ?

க்ரு :—அர்ஜுனு ! பரிசுத்த மனமுடையவனே ! உனக்கு மறுபிறப்புகிடையாது.

அர் :—சுவாமி, கீதை முடிந்ததா ?

க்ரு :— அர்ஜுனு, இன்னும் பத்து அத்தியாயங்கள் உண்டு.

ச்லோகம்.

வேதேஷு யக்ஞேஷு, தபஸ்ஸுசைவ
தாநேஷுயத் புண்யபலம் ப்ரதிஷ்டம்
அத்யேதி, தத்ஸர்வமிதம் விதித்வா
யோகீ பரம் ஸ்தாநமுபைதி சாத்யம்.

அர்ஜுனு !

நீ கீதையை ஸாமான்யமாய் நினையாதே. கீதையில் ஒரு சுலோகம் கேட்டால், நான்கு வேதங்களும் அப்யஸித்து அர்த்தவிசாரணம்செய்தால் ஏவ்வளவு பலனே அதைவிட அதிக பலன் உண்டாகும்; யக்ஞம், தபஸு, தானம், செய்தவர்களைவிட உயர்ந்த பலன் அளிக்கும். கீதா சாஸ்திரம் கேட்ட புண்யத்துக்கு ஸமமாக வேறெதையும் சொல்லமுடியாது. ஆனுல் கேட்டால் மாத்திரம் போதாது. அதை நன்ருய் மனதில் வாங்கவேண்டும். வாங்கினுல்தான், கர்ம, ஸன்யாஸ, பக்தி, த்யான யோகியாவான்.

அர் :—சுவாமி, அவனுக்கு என்ன கிடைக்கும்?

க்ரு :—முமுக்ஷுக்கள் விரும்பும் மோக்ஷம் கிடைக்கும்.

## அங்கம் 1. காட்சி 16.

*காந்தாரியின் அந்தப்புரம்.*

*கௌரவர்களின் மனைவியர்கள், யுத்தமுனைக்குச்சென்றுள்ள தத்தம் கணவரின் கதி நினைந்து வருந்துகிறார்கள்.*

ராகம்: ஹிந்துஸ்தான் அஸாவேரி. தாளம்: ஆதி.

ஐயோ, யென்செய்வோம் யெவ்வாறுய்வோம்— ஆ
தெய்வ சோதனையிதோ, தெரியவில்லையே,
தியங்கியே மனது மிகவும் அலைந்துநொந்தோமே— ஐயோ.
முன்செய் வினைவலியால், மூண்ட துயரோ
மோசமெது வருமோ, முடிவு யீதோ அறியோம்— ஐயோ.

து. மனைவிகள்.—மாமி, எல்லோருமே யுத்தத்துக்குப் போயிருக்கிறார்களே, அரண்மனைமுற்றும் சூன்யமாயிருக்கிறதே, எங்கள் கெதி என்ன ஆகுமோ, தெரியவில்லையே. மாமி, இந்த ஸமயம், தாங்களும் ஒன்றும் சொல்லாமலிருக்கிறீர்களே. சில நாட்களாய் நாங்கள் ஸ்வப்பனத்தில் காணும் துர்ச்சகுனங்களால், நமது பக்கலில் அபஜெயமே நேரும் எனத் தோன்றுகிறதே. எங்கள்மனதை எவ்வித ஸமாதானப்படுத்தினாலும் அடங்காமல் அது துக்கத்திலேயே மூழ்குகிறதே. ஆஹா! தினையளவு செய்த பாபத்தை, மலையளவு அனுபவிக்கநேருமென்னும் பெரியோர் வாக்யம் ஞாபகத்தில் வருகிறதே. நன்மைக்கு நன்மை தான், தீமைக்குத் தீமைதான் ப்ரதி பலன்.

காந்தாரி:—என்னடி பெண்காள்! ப்ரமாதப்படுத்திக்கொண்டிருக்கிறீர்கள். க்ஷத்ரியரின் மனைவியர், யுத்தத்திற்குப் போனப் புருஷரைப் பற்றி விசனிக்கலா? யுத்தம் ஸ்வதர்மமல்லவா?

விகர்ணமஹாராஜ மனைவி:—மாமி, நாங்கள் ஸ்திரீகளாயிருந்தாலும், க்ஷத்ரிய உதிரத்தில் ஜனித்தவர்கள் தான். ஆயினும், க்ஷத்ரிய தர்மமாவது யென்ன? வேதவிதிப்படியும் சாஸ்திர விதிப்படியும் நமது குடும்பத்தவர்கள் நடந்தார்களா? ருக், யஜுர், ஸாமவேதங்களைத்தள்ளி, அதர்வண வேதத்தை அனுஷ்டித்தார்கள். சாஸத்ர விரோதமாக நடந்தார்கள். நம்மவர் செய்வது அதர்ம யுத்தம். எதிரிகள் செய்வது தர்மயுத்தம். ஏன் நாம் விசனிக்கநேராது? நம்மவர் எவருக்கு மங்களத்தைக் கோரினர்கள்? நமக்கு ஏன் அமங்களம் ஏற்படாது? இப்போது நாம் விசனிப்பதினல் பயனென்ன? பிறருக்குத்தீங்குசெய்யும்போதே நமக்கும் அந்த தீங்கு உண்டென்று அப்போதே விசனித்திருக்க வேண்டும். நமக்குத் துன்பம் ஸமீபித்துவிட்டது. முற்பகல் செய்தால் பிற்பகல் விளைகிறது. அரசன் அன்றுகொன்றல், தெய்வம் நின்று கொல்லுகிறது. இனி யார் சிந்தித்து என்ன ஆகும்? எல்லாம் பகவத்ஸங்கல்பம்போல்தான் நடக்கும்.

காந்தாரி :—யாரடீ அங்கு பேசினது?

கௌ-ம :—விகர்ணமஹாராஜாவின் மனைவி.

காந்தாரி :—அவள் ஏன் சொல்லமாட்டாள்? அவளது பர்த்தாவும், அவளும் எதிரிகளின் அனுகூலர்கள்தானே. ஆயினும், நீங்கள் யாவரும் அதைரியப்படாதீர்கள்.

(கௌரவரின் மனைவியர் பாட்டு.)

ராகம் : ஹிந்துஸ்தானி : ஈவியோக என்ற மெட்டு, தாளம் : ஆதி.

மாமி :— பல்லவி.

தீமையான பல குறிகள் தெரியுதே
தியங்கி, மனம் வருந்துதே—தீமை.

அனுபல்லவி.

நாமித்துயரை எவ்விதம் ஸஹிப்போம், ஐயோ
நடுங்கிடுதே, வலது தோள் துடித்திடுதே—தீமை.

சரணங்கள்.

பாரத அமர் செய்யப்போன நம்புருஷர்
பதரியே அபஜெயம், மிக அடைந்தனரோ,
பாரில், உயிர், இழந்தனரோ அறியோம்—தீமை.

முதல் அங்கம் முற்றிற்று.

---

## அங்கம் 2. காக்ஷி 1.

### 9-வது அத். ராஜவித்யா ராஜ குஹ்யயோகம்.

### சாந்த ராஜ சரித்திரத்தால் விளக்கம்.

(சாந்த ராஜன் தனது மனைவியர் நால்வருடன் உத்யான வனத்தில் உல்லாசமாயிருத்தல்.)

4-வது மனைவி :—உலகத்தில் பிறந்தவர்கள் ஸுகத்தை அனுபவிக்கத்தான்.

3-வது மனைவி :—எல்லோருமே ஸுக மனுபவிக்க நேருவதில்லை.

2-வது மனைவி :—பூர்வ புண்யமிருந்தால் தான் கிடைக்கும்.

1-வது மனைவி :—பூர்வ புண்யமிருந்தாலும் இது என்ன, அநித்யம்தானே ?

சா. ராஜன் :—ஸகிகாள்! இந்த ப்ரபஞ்சத்தில் நித்ய ஸுகியாகயிருப்பவன்தான் புண்யாத்மா, அது தான் ப்ரத்யக்ஷ அனுபவம்.

ராஜன், மனைவியர் தர்க்கப்பாட்டு.

ராகம்: ஹிந்துஸ்தானி. மனமோஹனியகயா என்ற மெட்டு. ஆதி.

ராஜன் :— எனதின்ப மனோஹரிகாள், எழில்மேவும்
என்னுசை நாயகிகாள்
மன அன்புள்ள நங்கையர்காள்
அருமைசேர், அற்புத வசீகரிகாள்.

4 மனைவிகளும் :— வெகுசோபித ஸுந்தரன் நீரே
ஸுரதலீலையில் ப்ரியன் நீரே
ஸந்தாபமகலச் செய் வீரே
ஸல்லாப மடைய வரு வீரே

ராஜன் :— மிகு ஸந்தோஷமாக, மகிழ்ந்தே,
குலாவிடலாம் வாரீர். —எனதின்ப.

மனைவிகள் :— சந்தனகளபம் பன்னீர், யாவும் ஒன்றாய்ச்
சேர்த்திடுவோம்.

ஜாதி யிருவாக்ஷி ரோஜா, மலர்வகையைக்
கோர்த்திடுவோம்.

சங்கீத கானரச, பதம் ஜாவளி
பாடிடுவோம்

சார்ந்து இன்பமாகவே, நறுங்கனிகள்
உண்டிடுவோம்.

ராஜன் :— மடவனங்காள், மயிலினங்காள்
சுபவதிகாள், மனங்களிக்க வாரீர்— எனதின்ப.

(ராஜன், மனைவியரோடு உப்பரிகைக்குச்சென்று அங்கு பழங்களைத் தின்றுகொண்டு உல்லாசமாயிருக்கையில், பனுகு ப்ரவேசம்.)

பாட்டு.

பனுகு. ராகம்: செஞ்சுருட்டி. தாளம் : ஆதி.

பல்லவி.

பன்னக சயனம், பஜார்த்திஹந்தாரம் பன்.

அ. ப.

ஆகமவினுதம் ஆச்ருத ஸுலபம்
ஸ்ரீகாந்த மேவ பஜா— பன்.

சரணம்.

1 ஸ்ரீஜீவநேத்ரம், ஸுரார்ச்சித பாதம்
ஸ்ரீகேந்துநி பாஸ்யம், மோஹனுங்கம்
பரவாசுதேவ, மாதிசேஷ சாயினம்
முராந்தகம், ஸ்ரீமாதவமேவஸதா— பன்ன.

2 நீலாளகாவ்ருதம், நிஷ்களங்காஸ்யம்
நீராக, ஸம்ச்ருதம், லோகநாதம்
கிரிவர்யதாரகம் ஸுரேச
முத்தவாதி பூஜிதாங்க்ரிம்
ச்யாம ஸ்வரூபம் பஜா— பன்ன.

(பனுகுவென்னும் சாது, கீழே கிடந்த பழத்தோலை சாப்பிடுவதை ராஜன்பார்த்து)

ராஜன் :—யாரது ?

2-வது மனைவி :—ஆஹா, யாரோ ஒருவன் நாம் எறியும் பழத்தோலைத் தின்றுகொண்டிருக்கிறான்.

ராஜன் :—(காவலனைப் பார்த்து) யாரடா அங்கு? இவனை இங்கு வரவிட்டது யார்? காவற்றலைவன் எங்கே? நல்லது, நீங்கள் இவனைக்கொண்டு போய் நன்றாய் அடித்து ஹிம்ஸித்துவிரட்டுங்கள்.

காவற்றலைவன்:—(ஸாதுவைப்பிடித்து தள்ளி) நீ நல்ல ஆளையா. பழத்தோலைத்தின்ன, பழக்கடைக்குப் போகக்கூடாது. ராஜா அரண்மனைக்குத்தானா வரவேணும். எங்கள் பிழைப்பில் மண்ணைப்போட வந்தாயே.

(காவலன் : ஸாதுவை சவுக்கினல் நன்றாய் அடிக்க. ஸாது சிரிக்க.)

ராஜன் :—அடா ! பொறு. பொறு. இதோ நான் வருகிறேன்.

(ராஜன் ஸாது சமீபம் வந்து)

அடா பைத்யனே, இவ்வளவு கடுமையாக அடிகள் அடித்தும், சிரிக்கிறுயே? காரண மென்ன? இந்த அடிகளால், உன் சரீரம் நோகவில்லையா?

(ஸாது மறுபடியும் சிரிக்க.)

ராஜன்:—மறுபடியும் ஏன் சிரிக்கிருய்?

ஸாது:—ராஜன் எறிந்தபழத்தின் தோலைத் தின்ன எனக்கு இத்தனை அடியானல், பழத்தைத் தின்ன உனக்கு எத்தனை அடிகளேற்படுமோ? வீதியில் ஸஞ்சரிக்கும் எனக்கு இந்த சிக்ஷை யானல், ராஜ க்ருஹத்தில் வஸிக்கும் உனக்கு எந்தவித சிக்ஷை ஏற்படுமோ? ஸன்யாஸி யாகிய நான் இப்படி அடிப்பட்டால், அனேகம் ஸ்த்ரீகளோடு அநித்ய ஸுகத்தை அனுபவிக் கும் உன் கதி என்ன ஆகுமோ? நிரபராதி நான். ஒருவருக்கும் தீங்கு நினையாத எனக்கு இந்த க்ரூர தண்டனையானல், இந்திரிய வசப் பட்ட உன்னை எந்தவிதத் துன்பங்களுக்கு ஈச்வரன் ஆளாக்குவானே யென்று நினைத்துச் சிரித்தேன்.

ராஜன்:—ஐயா, தாங்கள் யார்? இந்த ஊரிலிருப் பவர்தானு? என்ன ஜாதி, எந்த வீதியிலிருப் பவர்? உமது பந்துக்கள் யார்? உமது ஸ்திதி யென்ன? தெரிவிக்கலாமா?

ஸாது — ஶ்லோகம்.

மாதாச கமலாதேவி
பிதா தேவோ, ஜனார்த்தன :
பாந்தவா விஷ்ணுபக்தாச்ச
ஸ்வதேசம், புவனத்ரயம்.

ராஜன், ருக்மணி பிராட்டியார் என் தாய்; ஸ்ரீ கோபாலனே என் பிதா; விஷ்ணுபக்தர்களே என் ஸர்வபந்துக்கள்; மூன்று லோகங்களும் என் சொந்த தேசம்.

ராஜன் :—ஸ்வாமி, தீனன் உஜ்ஜீவிக்க வழியறியேன். என்னை க்ருதார்த்தனுக்கவேண்டும். (என்று பாதத்தில் விழுந்து நமஸ்கரிக்க.)

ஸாது:—ஹே ராஜன்! உனக்குப் பரம ரஹஸ்யமான ராஜவித்யா, ராஜகுஹ்யமென்னும் ஞானத்தையும் விக்ஞானத்தையும் சொல்லுகிறேன். புண்ய பாபங்கள் யிரண்டுமில்லாதவனே, மோக்ஷத்துக்கு அருகன். இது முண்டகோபநிஷத் வாக்யம். இது ப்ரக்ஷ்யத்த அனுபவ ஞானம். இதை அனுஸரித்தால் சாச்வத ஸுகமாகிய மோக்ஷத்தையே அளிக்கும். இதில் ச்ரத்தையில்லாதவன் ம்ருத்யு ரூபமான ஸம்ஸாரத்திலேயே உழல்வான். அவ்யக்த ரூபனுன பகாவன் அந்தர்யாமியாயிருப்பார். அவர் ஸங்கல்ப்பத்தால் தான் எல்லாம் நடக்கிறது. மேலும்;

சுலோகம்.

அநந்யாஸ்சிந்தயந்தோ மாம்
யே ஜநா: பர்யுபாஸதே
தேஷாம் நித்யாபி யுக்தாநாம்
யோகக்ஷேமம் வஹாம்யஹம்.

அன்யபாவமில்லாமல் அவரையே த்யானிப்பவ னுடைய ஸகல யோக க்ஷேமங்களையும் அவரே வஹிப்பார். அவரைப் பூஜிக்கும் ஸுலபமான மார்க்கமாவது ஒரு பத்ரம், ஒரு புஷ்பம், ஒரு பழம் அல்லது ஒரு உத்தரணிஜலம் பக்தியோடு சமர்ப்பித்தால் அங்கீகரிப்பார். பக்தியுடைய வன் ஆசாரஹீனனாயிருந்தாலும் சீக்கிரம் அவர் கடாக்ஷத்தால் ஆசாரசீலனாவான். அவரை நம்பினோர் கெடமாட்டாரென்று பக வத்பக்தர்யாவருமே பிரதிக்ஞை செய்யலாம். இது கீதா வாக்யம். இந்த கீதையை நான்கு வருணத்தாரும், ஸ்த்ரீகளும், பஞ்சமர்களும் அனுஷ்டிக்க அதிகாரிகளாவார்கள். அனுஷ் டித்தவர்கள் மோக்ஷமடைவது ஸத்யம்.

ராஜன் :—விட்டேன் ஸமஸ்த பந்தங்களையும்; பெற் றேன் குரு கடாக்ஷம். மோக்ஷம்.

(ராஜன் மனைவிகள்)—நாதா! நாங்களும்.

ராஜன் :—ஆம்! ஆம்! அப்படியே ஆகலாம்.

(திடீரென்று காஷாயதாரிகளாய் மாறுதல்).

(எல்லோரும் பாட்டு).

ராகம் : ஹிந்துஸ்தானி. தாளம் : ஆதி.

அதீத யோகஞான ஸாது வுமது அடிபணிந்தோமே
கெதி நீர் என்று துணிந்தோம்
கன அக்ஞான, கடல் கடந்தோமே
விதேஹ, முக்திமார்க்க விபரநோக்கம்
தனைவிரும்பினோமே, விசேஷ
கதியளிக்கும், திருப்பொற்பாத
கமலம் நம்பினோமே! பொற் பாதகமலம்
நம்பினோமே.

ஸாது :— தொகைரு.

அகில புவனமெல்லாம், ஹரியின் ஆணையென்னும் அருளாலே
ஸுகிர்தரானபெரியோர் ஸ்வரூபஉண்மை யறிவார் துணிவா
நிகரிலாத இதனைஉணரும் தன்மைதெரிந்தீர் இனிமேலே [லே
மஹிமை மேவும் எனது சிஷ்யரானீர் வாழ்க புவிமேலே.

(ராஜன் மனைவிகள்). மஹாத்மா பாண்டுரங்கன் க்ருபையினாலே
பாக்யமடைந்தோமே, அதீதா.

---

## இடைக்காட்சி.

(கீதை மஹாத்மயம் விதூஷகன் பாட்டு.)

ராகம்: ஆனந்தபைரவி, தாளம்: ஆதி.

1. கண்ணனுரை செய்த தத்வ கீதை நாமும்
கருத்தி லெண்ணவ டைந்தோம் காதை—இதை
திண்ணமாய் நம்பியே பக்தி செய்யாதிருப்போர்
பெரும் பேதை மிகவாதை.

2. அந்தரங்கமுடன் ஹரிசரிதம் பார்த்து
ஆதரிப்பவர்க்கே வெகு லாபமிதம்—சொந்த
பந்தவினைகளைத் தீர்க்கும் பரந்தாமன்
பங்கயப்பொற் பாதம் அது புனிதம்.

3. மானவருக் கிதுவொரு மார்க்கம் இது
வைதிகன் சொன்ன கீதை தரும் ஸ்வர்க்கம்—அந்த
வானவரும் வந்து காண ஆசைகொண்டோர் வெகு
சோக்கம் போகும் துக்கம்.

4. புண்யவச மாகுமிந்த ஜென்மம் பாரத
பூமிதனில் வந்துதித்த மர்மம்—வர
கண்யமுடன் ஸ்ரீ பகவத் கீதாசரித்ரம் பார்க்கும்
சேமம் நல்ல க்ஷேமம்— (கண்ணனுரை.)

---

## அங்கம் 2. காட்சி 2.

## 10-அத்யாயம்.

## விபூதி யோகம்.

யுத்தாங்கம்: கிருஷ்ணார்ஜுன ஸம்வாதம்.

க்ரு:—மஹா பாஹோ! உன் ஹிதத்தைக் கோரி நான் மறுபடியும் சொல்லப்போகும் விஷயத்தை நன்றாய்க் கேள்.

அர்:—ஸ்வாமீ, என் க்ஷேமத்தின்பொருட்டு என் முகத்தினாலேயே யின்னும் கேட்க ஆசையிருப்பதைத் தெரிந்து தாங்களே சொல்ல ஆரம்பித்தது என் பாக்யம். தாங்கள் சொல்வதையும்

கேட்டுக்கொள்கிறேன். இன்னும் மற்ற பெரியோர்களிடமும், கேட்டுத் தெரிந்துக்கொள்கிறேன்.

க்ரு:—அர்ஜுனா! என் ஸங்கதியை நான் தான் சொல்லவேண்டும். ஸகல ஜீவ கோடிகளுக்கும் தேவர்களுக்கும், ஆதியானவன் நான், என்னை எவரும் அறியமுடியாது.

அர்:—ஹே, பரந்தாமா! தேவரிஷியான நாரதர், அஸிதர், தேவலர், வ்யாஸர், முதலானவர்கள் சொன்னதுபோலவே, தாங்களும் சொன்னீர். தங்களை எந்தெந்த ரூபங்களாக நான் பூஜிக்கலாம். தங்களுடைய விபூதி ஸ்வரூபத்தை அறிய விரும்புகிறேன்.

க்ரு:—அர்ஜுனா! என்னுடைய விபூதி ரூபத்தை அளவிடமுடியாது. ஆயினும், ஸங்க்ரஹமாகச் சொல்கிறேன் கேள். த்வாதசாதித்யர்களில் விஷ்ணுவும் சூர்யனும் நான். மருத்கணங்களுள் மரீசி நான். நக்ஷத்திரங்களில் சந்த்ரன் நான். வேதங்களில் ஸாமவேதம் நான். தேவர்களில் இந்த்ரன் நான். இந்த்ரியங்களில் மனஸு நான். ஏகாதச ருத்ரர்களில் சங்கரன் நான். யக்ஷர்களில் குபேரன் நான். வஸுக்களில் அக்னி நான். பர்வதங்களில் மேரு பர்வதம் நான். ப்ருகஸ்பதி நான். தேவஸேனாதிபதி

யாகிய ஸ்கந்தனும் நான். ஸமுத்ரமும் நான் வ்ருக்ஷங்களில் அச்வத்தம் நான். தேவரிஷி களில் நாரதன் நான். ம்ருகங்களில் ஸிம்மம் நான். ஸர்ப்பங்களில் வாஸுகியும் அனந்த னும் நான். பக்ஷிகளில் கருடனும் நான். வில் லாளிகளில் தசரதராமனும் நான். தைத்யர்க ளில் ப்ரஹ்லாதனும் நான். மாதங்களில் மார்கழிமாதம் நான். ருதுக்களில் வஸந்த ருது நான். கோபாலர்களில் வாஸுதேவன் நான். பாண்டவர்களில் தனஞ்செயனும் நானே.

---

11-வது அத்யாயம்.

## விச்வரூப ஸந்தர்சனயோகம்.

அர்:—க்ருஷ்ண! இரண்டாவது அத்யாயமுதல் அனேக அத்யாயங்களால் என்னை அனுக்ர ஹித்துச்சொன்னது நான் நன்கறிவேன். என்ன செய்வது, நீ ஜகத்ப்ரபு, யென்னால் உமக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை. ஆக யெனக்கு பீஷ்மத்ரோணராலுண்டான மோ கம் போச்சுது.

க்ரு:—அர்ஜுன! என்ன அதிக ஸ்தோத்திரம். ஸரி, எல்லாவற்றிலும் மோகம்போகவேண்டும். அதுதான் ஞானம். நான் சொன்னதெல்லா

வற்றிலும் நம்பிக்கை உண்டாயிற்ற? இனி என்ன ஆகவேண்டும்.

அர்:—ஸ்வாமி! தங்கள் மஹிமைகளைக் கேட்டேன். தங்கள் ரூபத்தையும் பார்த்துவிட்டால் நன்ருகுமென்றுதோன்றுகிறது. நான் அதற்குத் தகுந்தவனே என்னமோ?

க்ரு:—பார், அர்ஜுனு! நான் அந்த தேவரூபத்தைக் காட்டாவிடில், நீயும் உனக்குப்பிறகு கலியுகத் துப்ராணிகளுங்கூட என்னையும், கீதையையும் நம்பமாட்டார்கள். ஆகையால் வேதங்களாலும் ப்ரம்மாதி தேவர்களாலும், இன்னும் தேடப் படும் அந்த ரூபத்தைப்பார். நீ பரம பாக வதனல்லவா?

அர்:—ஸ்வாமி, நான் அந்த ரூபத்தைப்பார்க்க என்னை அருகனுக்கிப்பிறகு காட்டவேண்டும்.

க்ரு:—அர்ஜுனு! யிந்த நேத்ரத்தினுல் நீ பார்க்க முடியாது.

அர்:—ஆனுல், என் நேத்ரததிற்கு சிகித்ஸை என்ன வாகிலும் செய்யப்போகிறீரா?

க்ரு:—அப்படி அல்ல. உனக்கு திவ்யத்ருஷ்டி தரு கிறேன். அந்த நேத்ரத்தால் பார்க்கலாம். நீ பார்க்கு முன்னமே, யிந்த விதமாக யிருக்கு மென்று அதன் சுருக்கம் சொல்லுகிறேன்.

பாரதா! அநேக சிரஸுகளும், அநேக சரீரங்களாகவும், அநேக நேத்ரங்களும் அநேகபாதங்களாகவும் இதற்குமுன்னும் பார்க்காத அநேக ஆச்சர்யமானவைகளும், துவாதசாதித்யர்களும் ஏகாதசருத்ரர்களும் அஷ்டவஸுக்களும், அச்வினி தேவதைகளும் மருத்கணங்களும், ஸத்யலோகமுதல் பாதாள லோகம்வரை பதினான்குலோகங்களும், அதிலுள்ள அதிசயங்களும், இன்னும் சொல்ல முடியாதவைகளும் பார்க்கலாம்.

அர்:—சுவாமி! நான் அவ்வளவு லோகங்களுக்கும் போக எனக்கு சக்தி உண்டா?

க்ரு:—இங்கேயே பார்க்கலாம். என் பெரியதேகத்தில் ஒரு பாகத்தில் இவ்வளவும் பார்க்கலாம்.

(க்ருஷ்ணன் மறைய விச்வ ரூப தோற்ற தரிசனம்.)

பாட்டு.

ராகம்: ஹிந்துஸ்தானி. ஏக தாளம்.

ஸஹஸ்ரவதன, ஸஹஸ்ரநயன
ஸஹஸ்ரசரண போ, தேவ,
ஸகள நிகம, விநுத ஸுகுண
அனக புவன பால!
மாரஜனகமந்தரகிரி தாரீ முர வைரீ
வனமாலாதாரீ அமல கமல தளஸுநயன
அசிந்த்ய விச்வ் ரூபா—ஸஹ.

க்ரு:—ஆதி யந்தியம் பார்த்தாயா?

அர்:—ஆதி மத்யமே தெரியவில்லை. இனி அந்த்யம் எப்படிப் பார்க்கமுடியும், முடிவில்லா உமக்கு முடிவேது?

ஆஹா, த்வாதசாதித்யர்கள், ஏகாதச ருத்ரர்கள்.

க்ரு:—இன்னும் எப்படிக்காணப்படுகிறேன்?

அர்:—துர்யோதனுதியர், பீஷ்மர், த்ரோணர், கர்ணன் முதலியவர்கள் தங்கள் முகத்தில் விளக்கில் விட்டில் மடிவதுபோல் மடிகிறார்கள். தங்களை இன்னரென்று நிச்சயிக்கக்கூடவில்லை. தாங்கள் யாரோ?

ஆஹா, அப்சரஸ்கள், கந்தர்வர்கள்.

க்ரு: அர்ஜுனு! நான் காலன், ஸர்வஸம்ஹார மூர்த்தி. லோகத்தை நாசப்படுத்த யிங்கு வந்தேன்.

அர்:—எங்களையுமா?

க்ரு:—உங்கள் ஐவர் தவிர, இருஸேனைகள் எல்லோரையும். இனி யுத்தம் செய்ய மாட்டேனென்று சொல்லமாட்டாயே?

அர்:—எல்லாக் கார்யங்களும் தாங்கள் நினைத்தமாத்திரம் ஆகுமே? இனி நான் ஏன்?

ஆஹா, ஸத்ய லோகமுதல், பாதாள லோகம் வரை பதினன்கு லோகங்கள்.

க்ரு :—எல்லாம் உன்பொருட்டுத்தான். நீ கீர்த்தி அடையத்தான். ஸௌவ்ய ஸாசியாகையால் நீயே காரணனாகி அகண்ட ஐச்வர்யத்தையும் அனுபவிக்கலாம். ஜெயம் உனக்கே உண்டாகும்.

அர் :—லோகலோகங்களுக்கும் தேவேஸ்வரா! நீயல்லால் வேறு ஒன்றுண்டோ ? ஆஹா, ப்ரம்மா சிவனையும் கூடப்பார்த்தேன்.

க்ரு :—என் மனுஷ்ய ரூபத்தைப்பார்த்து என்னை ஸதா ஸாமான்யமாகவே நினைத்தாயல்லவா ?

அர் :—ஆம், அந்த ரூபத்தைப்பார்த்துதான் மோசம் போனேன். ஸ்வாமி! இனி இந்த ரூபத்தை உப ஸம்ஹாரம் செய்யவேண்டும்.

க்ரு :—நான் அவ்வளவு ஸுலபனா, நீ வேண்டாமென்றால்வேண்டாம், வேண்டுமென்றால் வேண்டுமென்று சொல்ல.

அர் :—சுவாமீ! ப்ரார்த்திக்கிறேன், நமஸ்க்கரிக்கிறேன். கருணாஸாகரா! அனுக்ரஹிக்கவேண்டும்.

க்ரு :—மறுபடியும் இந்த ரூபம் பார்க்கக் கிடைப்பதல்ல ; ப்ரஹ்லாதாதியர்க்கும் லபிக்காத இந்த ரூபம் உனக்குத்தான் காட்டினேன். சரி, இனி இதோ இந்த ரூபத்தைப்பார்.

(மீண்டும் கிருஷ்ணன் தோற்றம்)

அர் :—சுவாமீ! திக்குகளெல்லாம் ப்ரகாசித்த தங்களை இந்த ரூபமாகப் பார்த்த பின்பு தான் தெளிந்தேன். நான் எங்கிருந்தேனே தெரியவில்லை.

க்ரு :—அர்ஜுனு! இனி என்ன செய்யப்போகிருய்?

அர் :—சுவாமி! இனி தாங்கள் சொன்னதுபோல் செய்கிறேன். தங்கள் அனுக்ரஹத்தால், தேவ ரூபத்தையும் தரிசித்தேன். ஆனல் தங்களை 'ஹே க்ருஷ்ணு,' 'ஹே யாதவா,' 'மைத்துனு' என்று இன்னும் பலவிதமாகப்பலர் முன்னிலையிலும் பேசி பரிஹஸித்தேன். ஹே ப்ரபூ!

பாட்டு.

ராகம்: ஹிந்துஸ்தானி (நைநோஸநைநோமிலா மெட்டு.) தாளம்: ஆதி

அபராதம்பொருத்தருள்வீர் சுவாமி என்—அப.
அறியாமையினல், அந்தோ பெரும் பிழை
செய்தே னென்றன்—அப.

உபசாரவகையறியேன், உன் பாதத்திற்
காளானேன், உத்தமா கார்த்தருள்வாய்
ஸத்தியனே, உம்மையல்லாமல்
உற்ருருருவரில்லையே சுவாமீ—அபரா.

திக்கு திகாந்தமெல்லாம் தெரிந்த துன் ரூபம்
தேவாதிதேவா அடைந்தேன் பயம்
தீனன் எனக்கே, உன் திவ்யபொற்
சரண் தந்தா ளபயம்—அப.

ப்ரிய மனைவியின் குற்றத்தைக் கணவன் பொறுப்பதுபோல், என் குற்றங்களை பொறுத்து க்ஷமிக்கவேண்டும்.

க்ரு:—அர்ஜுனா! இனி என்னையே பக்தி செய். அந்த பக்தி பார்யாபுத்ர தனத்தைப்பார்க்கிலும், அதிக ப்ரீதியாய் இருக்கவேண்டும். நான் எல்லாவற்றிலுமிருப்பதால் யாரையும் த்வேஷிக்கக்கூடாது. இப்படிப்பட்டவனே மோக்ஷமடைவான்.

அர்:—சுவாமீ, இது என்பொருட்டு மாத்ரமா?

க்ரு:—அர்ஜுனா, ப்ரும்மச்ருஷ்டியிலுள்ள எல்லோருமே யிப்படி நடந்தால் மோக்ஷம் உண்டு.

---

அங்கம் 2. 12-வது 13-வது அத்யாயங்கள். காட்சி 2.

பக்தி யோகம். க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம்

(ஸ்ரீமத் ராமானுஜமடம்)

(ஆச்சார்ய சுவாமிகள் மத்தியில் ஏள்ளியிருக்க சிஷ்ய கோடிகள் அவரதிருபுறமும் வீற்றிருக்கின்றனர்)

சுலோகம்.

தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ:
மாமகா:பாண்டவாச்சைவ கிமகுர்வத ஸஞ்ஜய:

குரு:—சிஷ்யர்களே! இதுவரையிலும் பதினொன்ருவதான விச்வ ரூப அத்யாயம் முடிந்தது. இனி பன்னிரண்டாவதான பக்தி யோகமும், பதி மூன்ருவதான க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகமும் உபன்யாஸிக்கப்படும்.

சிஷ்:—சுவாமி, ப்ரும்மாதி தேவர்களை ஆராதிக்கக் கூடாதென்றும், பகவானையே ஆராதிக்க வேண்டுமென்றும் தெரிந்தது. ஆனல் லக்ஷ்மீ தேவியாரை ஆராதிக்கலாமா? கூடாதா?

குரு:—அப்பா, பிராட்டியையும் ஆராதிக்கவேண்டியதுதான். ஆனல் பகவானையே ஆராதிப்பது தான் சரேஷ்டம்.

சிஷ்:—ஸ்வாமீ, ஜெகன்மாதா அவர்களுக்குப் பிள்ளைகள்மீதுள்ள ப்ரீதி பிதாவாகிய ப்கவானுக்குண்டா?

குரு:—ஐயா, லக்ஷ்மீ ஸ்திரீயாகையால், த்யானிப்பவர்கள் ஸகல ஸௌந்தர்யங்களையும், வருணித்தால்தான் பக்தி உண்டாகும். அப்படி வருணிக்கும்போது ஸ்திரீ அங்கங்களானதால், புத்தி சபலித்தால் அவன் என்னகெதியாவது? ஆகையால் பகவானை பக்தி செய்வதுதான் ச்லாக்யம். லக்ஷ்மியை மாதுர்பாவத்தைக் கொண்டு த்யானிக்கும்போது, 'லக்ஷ்மீ நாரா

யணு' 'ஸீதாபதே' 'ருக்மிணி ஸமேதா' என்று மாத்ரு சப்தத்தோடு பஜிக்கவேண்டும்.

சிஷ் :—சுவாமீ ! தாங்கள் சொன்னது சரியான கார்யம். மாதா பிதாக்களைச் சேர்த்து த்யானிப்பதே உத்தமம். இனி ஒன்று. ஸகுணோபாஸனை நன்றா? நிர்க்குணோபாஸனை நன்றா? இதன் விசேஷம் சொல்லவேன்டும்.

குரு :—நிர்க்குணோபாஸனை செய்வது கஷ்டம். சகுணோபாஸனையாகிய பகவானுடைய பக்திக்கு வேண்டிய ஸத்கர்மங்களைச்செய்து, கர்ம பலத்தைப் பகவதர்ப்பணம் செய்தவன் மிகப்பெரியவன். பகவானை ஆராதித்து மற்ற தெய்வங்களை ஆராதிக்கக் கூடாது. அப்படிப்பட்ட யோகந்தான் நீங்கள் செய்யவேண்டும். பரோக்ஷ ஞானத்தின்மேல், அப்ரோக்ஷ ஞானம் உண்டாவதுபோல், ஸகுணோபாஸனையே முடிவில் நிர்க்குணோபாஸனையாக முடியும்.

சிஷ் :— சுவாமீ, பகவானை உபாஸிப்பது ச்ரேஷ்டமா? ஆத்ம உபாஸனை ச்ரேஷ்டமா? இதில் நாங்கள் எதைச்செய்வது?

குரு :—முமுக்ஷுக்களே ! பகவானுடைய உபாஸனை தான் ச்ரேஷ்டம். மனதிற்கு சீக்கிரம் ருசித்து, மனோவ்ருத்திகள் ஸ்திரப்பட்டு நிவர்த்திகர்மாவி

னல் பகவந் முகோல்லாஸத்தைப்பெற்று, எல்லாவற்றிலும் விரக்தியுண்டாகி, பகவத்யானத்தில் லயித்து மௌனியாவான்.

சிஷ் :—விரக்தி மௌனத்துக்குப்பலன் என்ன ?

குரு :—அவரை அடைவதுதான். அவர் ஊராகிய பரமபதம் போவதுதான்.

சிஷ் :—சுவாமீ ! அப்படிப் போனல் பரமபதத்தில் எத்தனை நாள் இருக்கலாம் ?

குரு :—அவரைச் சேர்ந்தபின் விடவேமாட்டார். இந்த அத்யாயம் அம்ருதமானது. இதை அனுஷ்டிக்கவேண்டியது அவச்யமே.

சிஷ்:—ஸத்குரோ! புராணங்களில் க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞனென்று சொல்லப்பட்டிகிறது ? ப்ரக்ருதி புருஷன் இருவரும் ஒன்றேயா அல்லது வேறு வேரு ?

குரு :—க்ஷேத்ரம் என்பது யிந்த சரீரம். அதை அறிபவன் க்ஷேத்ரக்ஞன். தெரிந்தவர் இப்படித்தான் சொல்லுவார்.

சிஷ் :—சுவாமீ, இந்த்ரியார்த்தங்களில் வைராக்ய முண்டாக வேண்டு மென்று சொன்னீர்களே, அது ஸுலபந்தானு ? நடக்குமா ?

குரு :—பக்தகோடிகளே ! ஜனனம், மரணம், கிழத்தனம், வியாதி, துக்கம் முதலிய தோஷங்களை

யோசித்தாலே போதும். ஞான வைராக்யம் உண்டாகிப் பிறகு பகவானை ப்ரீதியோடு பஜிக்க ஆசையுண்டாகும்.

சிஷ் :—அப்படியே செய்கிறோம்.

குரு :—எப்படி ப்ரீதி ?—விபசாரமில்லாத ப்ரீதி. விபசாரமென்றால், ஓரிடத்தில் வைத்த ப்ரீதியைப்போல் மற்றோரிடத்தில் வைப்பது, அது கூடாது. அனன்ய பாவமாய் அவர் ஒருவரையே த்யானிக்கவேண்டும்.

சிஷ் :—ஆனால் பார்யா புத்ராதிகளை விட்டு விடலாமா ?

குரு :—அப்படியல்ல, ஒருவன் பத்துப் பேரைக் காப்பாற்ற வேண்டியதுதான். பார்யாபுத்ராதிகள் ஸத் கர்மங்களுக்குத் துணையாயிருப்பதால், அவர்களும் இருக்கவேண்டியது அவச்யம் தான். ஆனால் அவர்கள்மீது ஆசை ஸமமாக யிருக்கவேண்டும்.

சிஷ் :—சுவாமீ, பரமாத்மாவாகிய அவர் எல்லாவற்றிலும் எப்படி யிருப்பார் ?

குரு :—ஆகாசத்தைப்போல் ஒன்றிலும் ஒட்டாமல், உத்தம, மத்திம அதம ஸ்தானங்களிலிருந்தாலும், அதனோடு ஸம்பந்தங்கிடையாது.

சிஷ் :—சுவாமீ! இதை யெல்லாம் படித்துத் தெரிந்துகொள்ளாதவன் என்ன செய்யலாம்?

குரு :—பெரியவர்களை ஆச்ரயித்துக் கேட்டுத்தெரிந்து கர்மா செய்யவேண்டும்.

சிஷ் :—சுவாமீ! கேட்டும் மனதிற்கு அர்த்தமாகவில்லை?

குரு :—இந்த விஷயம் அர்த்தமாகாதவனும் விடாமல் வைராக்யத்துடன் கேட்டே தெளியவேண்டும். அதிலும் தெளியாதவன் ராமக்ருஷ்ணையர் படத்தில் பார்த்துத் தெளிவதுபோல், இந்த பகவத்கீதாவிலாஸ நவரஸபரித நாடகத்திலாவது கண்டால் தெளியலாம். எல்லாவற்றிலுமிதுவே ஸுலபமான மார்க்கம். அதை உத்தேசித்தே, பெரியோர்கள் நாடகத்தை சாஸ்திர முகமாகவும், பாத்ரமுகமாகவும் ஏற்பாடு செய்தனர்.

சிஷ் :—இந்த அத்யாயம் என் கேட்கவேண்டும்?

குரு :—க்ஷேத்ர, க்ஷேத்ரக்ஞ, ப்ரக்ருதி புருஷ, ஞானஞேய ஞான ஸாதனத்தால், ஞான த்ருஷ்டி உண்டாகும். இந்த பதின்மூன்ருவது அத்யாயத்தின் பலன்—இதைக் கேட்பதேதான்.

(பொதுப்பாட்டு—எல்லோரும் பாடுதல்.)

ராகம் : யமுன்கல்யாணி. தாளம் : ஆதி.

கோகுல, பரிபால, கோபாலா
குவலயம் புகழும், குண அதி பல,
கோபீ ஜெனநேசா, விச்வாஸா,
குளிர்மதி வதன, கோமகனே, மாமணியே — கோ
கோகுல, பரிபாலா கோபாலா, வனமாலிகாதரனே
திருமார்பா, மனவியாகூல ஹரனே, ப்ரதாபா
எது, வம்சவிசேஷா, குலதீபா, குளிர்மதி வதன
கோமகனே, மாமணியே! கோகுல:

---

**அங்கம் 2.]** 14-வது அத்யாயம். **[காட்சி 4.**

## குணத்ரய விபாகயோகம்.

(ஸுகானந்தர் சரித்திரத்தால் விளக்கம்.)

மாயா ஸாதுவும், யதார்த்த ஸாதுவும் பாடிக் கொண்டு ஸுகானந்தர் வீட்டுக்குப் போதல்.

பாட்டு.

ராகம் : யதுகுலகாம்போதி. தாளம் : திஸ்ரகதி ஏகதாளம்.

ஆலோல துளஸீ, வனமாலா பூஷண, ஸ்ரீராம ராமஹரே:
ஸ்ரீமன் நாராயண க்ருஷ்ண கோவிந்த
ஜெகன்னாத, கோபால, ஜெகன்னாத
புருஷோத்தம, பாலயா :

தசரத பாலா, தசமுக காலா, ஸ்ரீராம ராமஹரே
ஸ்ரீமன் நாராயண க்ருஷ்ண, கோபால ஜெகன்னாத
புருஷோத்தம பாலயா.

வாலிமர்த்தன, வானரபோஷண: ஸ்ரீராம ராமஹரே
ஸ்ரீமன் நாராயண க்ருஷ்ண, கோவிந்த ஜெகன்னாத
புருஷோத்தம பாலயா.

மாயாஸாது—சுவாமிகளே! ஸுகானந்தர் வீட்டில் ஸுகமானபோஜனம் கிடைக்கும். தங்களுக்கு வரப் பிரியமோ?

மாயா ஸாது:—சாப்பாடு கிடைப்பதாயிருந்தால், வருவதற்கென்ன ஆக்ஷேபனை?

மா-ஸாது:—சுவாமிகளே! சாப்பாடு கிடைப்பதாயிருந்தால் என்று சொல்லவேண்டாம். அந்த ப்ரபு, வள்ளல். ஸுகானந்தர் ஸாதுக்களுக்குப் போஜனமளிப்பதற்காகவே, காத்துக்கொண்டிருக்கிறார். நாமல்ல, நம்மைப்போல், ஸாதுக்கள் எவ்வளவு பேர் வந்தாலும் ஆக்ஷேபனையில்லை. வாருங்கள், வாருங்கள்.

(இருவரும் சுகானந்தர் வீட்டை நாடிச்செல்லல்).

(ஸுகானந்தர் காசியாத்ரை சென்று
திரும்பும் மார்க்கம்.)

பாட்டு.

ராகம்: ஹிந்துஸ்தானி. தாளம்: ஆதி.

பல்லவி.

தாசரதே பாஹிமாம், தீனம்
நாரத முனி ஸம்பாவ்ய, ஸுகோமள. (தாசரதே,

அனுபல்லவி.

தாசகுஹமித்ர, தாமோதரா மல,
தீனர்த்தி, வித்வம்ஸகா, திவ்யகாத்ர (தாச)

வ-ம்:—உலகத்தில் ஸ்திரீ, புருஷர்கள், பார்ய பார்த்தாக்களாய் ஒற்றுமையுடன் வாழும் தம்பதிகள் வெகு சொற்பம். நானும் என் முன்னோர்களும் செய்த புண்ய வசத்தால், பகவத், பாகவத பூஜையில் மிகு ஆசையுள்ள விவேகியான மனைவி எனக்கு வாய்த்தாள். அதனுல் நானும் திவ்ய தேச யாத்ரை செய்யும் பாக்யத்தை அடைந்தேன். அதிதிகளை உபசரிப்பதே தான் க்ருஹஸ்தாச்ரம தர்மம். அந்த விஷயத்தில், வெகு ஜாக்ரதையானவள் என் பத்னி. ஹே ஜெகத்ரக்ஷகா! நாங்கள் பாகவத பகவத் பக்தியினின்றும், தவருமல், எங்களை ரக்ஷிக்க வேண்டும். நான், யாத்திரைக்கு வந்து நாளாச்சுது. ஸ்திரீயைத் தனி விடுத்து வந்தேன். அவள் என் வருகையை ப்ரதிக்ஷணமும் எதிர்பார்த்திருப்பாள்.

---

## ஸுகானந்தர் வீடு.

ஸுரஸுரி பாட்டு.

ராகம் : ஹிந்துஸ்தானி. தாளம் : திஸ்ரகதி.

1. சண்டகரான்வய, வாரிதி ஸம்பவ
சந்த்ரம ஸம்பஜரே, ஸ்ரீராகவ, சந்த்ரம ஸம்பஜரே
2. தண்டகவாஸீ, முனீச்வர, மானஸதோஷ
ஸந்தாயினமார்த்தி ஹரம், ஸ்ரீராகவசந்த்ரம ஸம்பஜரே — ஸ்ரீ

3. ஸாரஸநாபமுமாதவ, ஸுப்ரிய மாச்ருத கல்பதரும் ஸமாச்ருத யோகி வஸிஷ்டகுரும்.

4. க்ருத பார்க்கவ, கர்வவிபங்க மஹீச்வர, ஸோதர ஸேவ்யபதம். அகீச்வர, ஸோதர ஸேவ்யபதம்.

5. பரத ப்ரதத்த, ஸுபாதுகா மக்ஷய மாச்ருத வாயுஸுதம் ஜடாயு விஹங்கம மோக்ஷபதம்.

6. விநத விபீஷண கபிவர பாலன தக்ஷம, வாப்ததராதநயம் ஸ்ரீராகவ சந்த்ரம ஸம்பஜரே.

வ-ம்:—ஸ்திரீ தன் பர்த்தாவின் வாக்ய ப்ரகாரம் நடந்து பார்யாள் பர்த்தா இருவரும் ஏக மன தாக க்ருஹஸ்த தர்மங்களை நீதியோடு நடத்தி நித்ய ஸுகமாகிய மோக்ஷ ஸுகத்தை அடைந்த மஹான்களின் கதைகள் அனேகம் உண்டு. என் பதி திவ்ய தேச யாத்திரை போகும்போது, தினமும் அதிதிகளை உபசரிக் கத் திட்டம் செய்து போயினர். நானும் பதி யின் வாக்கை அனுஸரித்து நடந்து வருகிறேன். என் பதியின் மேலான குணங்களை நினைக்க நினைக்க என் மனம் என்ன ஆனந்தமடை கிறது.

சுலோகம்.

மாத்ருவத் பரதாராம்ச்ச
பரத்ரவ்யாணி, லோஷ்டவது
ஆத்மவத் ஸர்வ பூதாநி
யப்பச்யதி, ஸபச்யதி :

என்பதுபோல், என் பர்த்தா, பரஸ்திரீகளைத் தாயைப்போலும். பர த்ரவ்யத்தை மண்ணாக வும், ஸகல ப்ராணிகளையும் தன் ப்ராணனைப் போலவும், பாவிப்பவர். நான் எத்தனையோ ஜென்மங்களில் செய்த புண்ய வசத்தால், இந்த மஹானைப் பர்த்தாவாய்ப் பெற்றேன்.

(மாயா ஸாது வருதல்)

பாட்டு.

க்ஷீராப்திசயன க்ஷாராப்திபஞ்சன
ஸ்ரீராம ராமஹரே ஸ்ரீமந் நாராயண
க்ருஷ்ண கோவிந்த ஜெகன்னாத
புருஷோத்தம பாலயா.

(ஸாதுக்கள் உள்ளே ப்ரவேசித்ததும் ஸுரஸுந்தரி அவர்களை நமஸ்கரித்து உபசரித்தல்)

ஸுரஸுந்தரி :—ஸாதுக்களே ! வாருங்கள், நாங்கள் செய்த புண்யம், தங்களைப்போன்ற அதிதிகள் தரிசனம் கிடைத்தது. எல்லாம் பண்டரிநாத னின் அனுக்ரஹம்.

மா. ஸாது :—தாங்கள் யாரம்மா? ஒண்டியாயிருப் பானேன் ? தங்களுக்குப் பெற்றோர் பந்துக்க ளில்லையா, பதி எங்கே ?

ஸௌராஸ்ட்ரி (சுவாமீ)

சுலோ பித்ருமாத்ரு, ஸௌதப்ராத்ரு
தாரமித்ராத யோபிவா
ஏகைக, பல, லாபாய,
ஸர்வலாபாய கேசவா :

வ-ம் :—சுவாமீ! மாதா பிதாக்கள், சோதர சோத ரிகள் ஆகிய ஒவ்வொரு பந்துக்களாலும், ஒவ்வொரு வித லாபந்தான் அடையலாம் : ஆனல் ஸர்வ லாபங்களையும் அடையலாம் கேசவனை நம்பினேர். இவ்விடம் வரும் ஸாதுக்களுக்கு வேண்டியவாறு உபசரிக்க என் நாதன் ஆக்ஞாபித்து யாத்திரை சென்றிருக்கிறார். தயை கூர்ந்து எழுந்தருள வரவேண்டும்.

மா. ஸாது :—ஆகிலும் நீ ஸ்திரீ. உன்னிடம் எப்படிச் சொல்லலாம்.

ஸௌராஸ்ட்ரி :—சுவாமீ! சொல்லலாம். நான் பதியின் வாக்கின்படி நடக்கவேண்டும். அதிதிகள் வந்து திரும்பிப்போனல் என்பதி கோபிப்பார். அவருக்கு நான் என்ன சொல்வேன். ஆகையால் தாங்கள் என்னல் ஆராதிக்கப் பெற வேண்டும்.

மா. ஸாது :—ஸாத்வீக குணமுடைய பெண்ணே! நான் வந்தது பசியினல். இங்கு வந்து உன்னைக் கண்டதும் வேறு ஆசை உண்டாய் விட்டது. பசியும் மறந்தேன்—உன் க்ருபை.

ஸாரஸாரி:—(ஆத்மகதம்) ஆஹா த்வாரகாநாதா! நாதா! எல்லாம் உங்கள் செயல்: பர்த்தாயில்லாத ஸமயத்தில், ஸ்ரீ பண்டரிநாதனே என்னைச் சோதிக்க வந்திருக்கிறார். எனக்கேன் இந்த தேஹாபிமானம்? (ஸாதுவைப் பார்த்து) சுவாமீ! தங்களபீஷ்டம்போல் நடந்துகொள்கிறேன். முன்பு ப்ரஸாதம் ஸ்வீகரித்துக் கொள்ளுங்கள்.

மா. ஸாது:—ஸாரிஸாரி நல்ல புண்யவதி. இன்று எனக்கு உயிர்ப்பிச்சை தந்தனள்.

(என்று சொல்லி யதார்த்த ஸாதுவிடம் சாப்பாடு கிடையாதென்று 'போய்விடும்படி சொல்லி அவன் சாப்பிடப் போதல்)

ய. ஸாது:—ஆஹா! என்ன காலம்! ஏழையாகிய என்னை, ஸாதுவேடம் தரித்தால் நன்றாய் சாப்பிடலாமென்று அழைத்துவந்தான். அதற்கு மேல் இந்த துரோக எண்ணத்தையும் கொண்டான்: இவன் கெதி என்ன ஆகுமோ? நல்லது நாம் தூரத்திலிருந்து பார்ப்போம்' (மறைதல்)

ஸாரஸாரி:—சுவாமீ! இந்த புஷ்பசந்தண தாம்பூலங்களைத் தரித்துக்கொள்ளுங்கள். படுக்கை அலங்கரிக்கிறேன்.

(மாயா ஸாது போஜனமருந்தி தாம்பூலம் தரித்துக் கொள்ள, ஸுரஸுந்தரி படுக்கை அலங்கரித்தல்)

மா. ஸாது :—ஆஹா! இன்றுதான் இந்த ஸ்திரீயை அடைய நேர்ந்தது. எத்தனை நாள் எதிர்பார்த்தேன். திருடன் பங்கிலும் தெய்வமிருக்கிறது.

பாட்டு.

ராகம் : ஹிந்துஸ்தானி தாளம் : ஆதி

(மாயா ஸாது தாம்பூலம் தரித்துக்கொண்டு பாடுதல்).

கம்கு சலதமைபடா ஹரே
கம்கு சலதமைபடா திவானி ராம நாமமே படா
ஹரே ப்ரக்லாத பேடா அரேஸைலேடா
ஜீயகாமகை டடா அரே ஜீயகாமகே
டடா திவானி ராமநாமமே படா
அரே சொஹிநை சொஹிநை படா திவானி
ராமநாமமே படா (அரேகம்கு)

(ஸுர ஸுந்தரி படுக்கையை அலங்கரித்து முடித்து பகவானை நினைக்க அவர் ப்ரத்யக்ஷமாகி அபயம் அளித்து மறைதல்.)

(பிறகு மாயாஸாது படுக்கை ஸமீபம்போக ஓர் புலியிருப்பதைப் பார்த்து பயந்து)

மா. ஸாது :—ஆஹா! ஐயோ புலி, புலி, அம்மா புலி, தாயே புலி புலி.

(ஸுரஸுந்தரிப்ரக்ஞை தெளிந்து வந்து ஸாதுவைப் பார்த்து.)

ஸுரஸுரி :—ஸாது ஜனக்ரேச்வரா ? ஏன் வெளியில் வந்து விட்டீர்கள். நான் ஏதேனும் தவறாய் நடந்தேனோ ?

மா. ஸாது :—(திடுக்கிட்டு) ஐயோ புலி, தாயே புலி ஆஹா என் உயிர் போச்சுது. நான் இனிமேல் இந்த துஷ்ட செய்கையை மனதிலும் நினைக்கமாட்டேன்—நினைக்கமாட்டேன்.

ஸுரஸுரி:—இவையெல்லாம் பண்டரிநாதன் லீலையும் என் ப்ராணபதியின் மகுத்துவமும். ஐயா, பூர்வம் தங்களைப்போல், காமாந்தகாரனாய், க்ருத்யாக்ருத்ய விவேகமில்லாத சில தேவரும் ஞானிகளும், தப்ஸிகளும் கூட அழிந்தார்கள். அகல்யைக்காக இந்த்ரனும், திலோத்தமைக்காக ஸுந்தோபஸுந்தாளும், மேனகைக்காக விச்வாமித்ரரும் ; மாந்தாதா புத்ரிகளுக்காக கௌபரியும், ப்ரமோசனைக்காகக் கண்டுமஹறிஷியும், சர்மிஷ்டைக்காக யயாதியும், ரதிதேவிக்காக சம்பரனும், தாரைக்காக சந்திரனும், இந்த்ராணிக்காக நகுஷனும், ரம்பைக்காக ராவணனும் குசனுப புத்ரிகளுக்காக வாயுதேவனும், த்ரௌபதிக்காக சைந்தவனும் கீசகனும், தமயந்திக்காக திக்பாலரும் கலிகிராதகாளும், ஸத்யவதிக்காக உக்ராயுதனும், ஊர்வசிக்காக புரூரவனும், கைகேயிக்காக தசரதனும், ஸுருசிக்காக உத்தான

பாதனும், ரிஷிபத்னிகளுக்காக அக்னி தேவனும், சைப்யைக்காக ஜாமக்னனும், சித்ராங்கிக்காக நரேந்த்ரனும் இன்னும் அனேக ஸ்திரீகளுக்காக அனேக புருஷர்கள் அடைந்த கதி சொல்லமுடியாது. மேலும் உலகத்திலுள்ள ஸகல ஸ்திரீகளும் ஸகலவித பொருள்களும் ஒருவன் ஆசைக்குப் போதாது. ஸகல விதத்தாலும் காமம் பொல்லாது. இந்தக் காமத்திற்கு மஹா அசனனென்றும், பாபியென்றும் பெயர்: இவன் செய்கையாவது, ஸூர்ய உதயமுதல் ஸூர்யாஸ்தமனம் வரையில் எந்த விதத்திலாவது த்ரவ்யம் தேடுவது, ஸூர்யாஸ்தமனமுதல் மறுநாள் சூர்யோதயம் வரையில் விஷய போகங்களில் ப்ரவர்த்திப்பது. இந்த இரண்டைத் தவிர, அருமையான மனித ஜென்மம்கிடைத்ததே—எவனையறிந்து யிந்த ஜெனன மரண வியாதியைப் போக்கிக் கொள்ளவேண்டுமோ அவனை யெண்ணுவதில்லை. இனியாகிலும், பரமாத்ம ஸ்வரூபத்தை த்யானித்தால் நித்ய முக்தனுகலாம்.

(ஓர்புறமாக ஒதுங்கிக் கேட்டுக்கொண்டிருந்த ஸுகானந்தர் வீட்டிற்குள் வருதல்)

ஸுகா:—ஹே குணராசீ, உன்னை மனைவியாகப் பெற்ற நான் க்ருதார்த்தனுனேன்.

(மாயாஸாது ஸுகானந்தர் காலில்விழ)

ஸுகா :—(மாயாஸாதுவைப்பார்த்து) ஹே பக்த னே ! இவையாவும் நடப்பதெல்லாம் ப்ரக்ருதி ஸம்பந்தத்தினுலுண்டான தோஷங்கள். இனி அவர் கடாக்ஷத்தினல், நன்மையே அடைவாய். ஆயினும், ஸ்ரீமத் பகவத்கீதை பதினன்காவது அத்யாயமாகிய குணத்ரய விபாக யோகத்தின், ஸாராம்சங்களைச் சொல்லுகிறேன் கேள்.

சுலோகம்

குணேதா நதீத்ய த்ரீந்
தேஹீ தேஹ ஸமுத்பவாந்
ஜந்மம்ருத்யு ஜரா: துகைர்
விமுக்தோ ம்ருதமச்நுதே:

வ.ம் :—ஸத்வ ரஜஸ் தமோ குணங்களின் விவரம் கேள். ஸத்வகுணம் மோக்ஷமும் நித்யஸுக மும் கொடுக்கும். ரஜோகுணம், எதிலும் ஆசை யே கொடுத்து கர்மத்தையே கோரி த்ரவ்யம் ஸம்பாதித்து சாஸ்திர விரோத கார்யங்களைச் செய்து பூலோகத்திலேயே அடிக்கடி ஜென் மம் கிடைக்கச் செய்யும். தமோ குணமோ எதிலும் சேராமல் மனம்போன போக்காக நடந்து ஸகல பாபகார்யங்களையும், புண்யமாக நினைத்துச் செய்வித்து நரகவாசம் கொடுத்து பிறகு ம்ருகமாகவும் பிறக்கச் செய்யும். ஆகை

யால் இந்த மூன்று குணங்களில் ரஜஸ்தமோ குணங்களைத் தவிர்த்து, ஸத்வ குணத்திலேயே ப்ரவர்த்தித்து ப்ரக்ருதி பந்தரஹித சுத்தாத்ம ஸ்வரூபத்தையே அடைவாய்.

பாட்டு

ராகம் : ஹிந்துஸ்தானி தாளம் : ஆதி.

பல்லவி:

ஸாகேதநாதா ஸநகாதி யோகிவந்தித : ஸா:

அ. ப.

ராகேந்துஸன்னிப வதனவிசோபா
காகநயன விதாரபஹுதர
தீரஙிசர கோரபய ஹர ஸா:

அண்ட ஜவாஹமார்த்தாண்ட குலோத்பவ
ஏஹிபதனதம் பாஹிபரமவைதேஹி
ரமணத்வம் பாலம் சாதிஹி ஸா:

சங்கரபத்மஜ ஸன்னுதகீர்த்தே
ராம மரகத ச்யாம ரிபுகுல பீம ரவிகுல
ஸோம த்ருதஸம (ஸா:)

ய. ஸாது :—மஹாபாபி, அவன் கெதி என்ன ஆச்சுதோ?

ராகம் : ஹிந்துஸ்தானி தாளம் : ஆதி.

டாடே யிடபரஙிகட்கடீ கர பீதாம்பர
பரிதாரீரே.
சங்கசக்ரதோ ஹாதபிராஜே,
கோவர்த்தனகிரி தாரீரே.

மோஹன முரதப, ஸுரதபனிரஹய
நடனுகர ப்ருஜபாவஸீரே,
ஹதவிகுஸுமஸம, காந்திபிராஜே
மோரமகுடகள துளஸீரே. டாடே.

---

அங்கம் 2] 15வது அத்தியாயம். [காட்சி 6

## புருஷோத்தம ப்ராப்தியோகம்.

யுத்தரங்கம்: ரதத்தில் க்ருஷ்ணார்ஜுன சம்வாதம்.

அர்:—சுவாமி, பதின்மூன்று பதினுங்கு அத்யாயங்கள் சொன்னதெதற்கு?

க்ரு:—ப்ரக்ருதி பந்தத்தைத் தொலைத்துக் கொள்ள, மோக்ஷமடைய.

அர்:—ஆனல் இந்தப் பதினைந்தாவது அத்யாயத்தில் அதற்கு வழி சொல்லுங்கள்?

க்ரு:—அர்ஜுனு! இது புருஷோத்தம ப்ராப்தி யோகம். ஸம்ஸார வ்ருக்ஷம் அல்லது ஜெகத் வ்ருக்ஷம் என்று ஒரு அசுவத்த வ்ருக்ஷம் வழி மறைத்திருக்கிறது. அதைச் சேதித்தால் தான் மோக்ஷத்துக்குப் போகலாம்.

அர்:—அதைச் சேதிப்பதெப்படி?

க்ரு:—இந்த வ்ருக்ஷம் நூதனமாகப் பிறந்ததல்ல, இதின் ஆதிமத்யாந்த்யம் தெரியாது. நன்ருய்

வேர்கள் பாய்ந்திருக்கிறது. த்ருடமான சஸ்தி ரத்தினல் சேதிக்கவேண்டும்.

அர் :—அது எப்படிப்பட்ட சஸ்திரமோ ?

க்ரு :—அதுதான் அஸங்க சஸ்திரம். அது வஸ்துக் களில் விரக்தியும் பரமாத்மாவினிடம் ரக்தியும் தரும். அதனல் சேதிக்கலாம். புராணவைரா க்யம், ஸ்மசான வைராக்யம், ப்ரஸவ வைரா க்யம் போலிருந்தால் முடியாது. த்ருடமாக யிருக்கவேண்டும். ஸத் க்ரந்த ச்ரவண மனனங் களால் தான் த்ருடப்படும். பிறகு தான் அதைத் தேடவேண்டும்.

அர் :—எதைத் தேடவேண்டும் ?

க்ரு :—திரும்பி வராத ஸ்தலத்தை, வைகுண்டத்தை.

அர் :—அந்த வ்ருக்ஷத்தைச் சேதித்து உம்மை அடையும் விதம் எப்படி.

க்ரு :—மானம், மோஹம், விபரீதஞானம் கூடாது. வேதாந்த விசாரத்தில், நித்யமாக யிருக்க வேண்டும். துராசை கூடாது. காமம் கெட்டது. அது, த்வந்தங்களைத் நீக்கினல்தான் போ கும். அது போகாமல் ப்ரக்ருதி பந்த ரஹித சுத்தாத்மா ஆக முடியாது.

அர் :—ஆத்மாவின் நிஜ ஸ்திதி தெரியாததின் கார ணம் என்ன ?

க்ரு :—ப்ரக்ருதி ஸம்பந்தமான மூன்று குணங்களில் அகப்பட்டவர் பார்க்கமுடியாது. ஞான த்ருஷ்டியுள்ளவர் பார்த்துக் கொண்டுதானிருக்கிறார்.

அர் :—சுவாமீ! எனக்கு வேதத்தின் அர்த்தம் தெரியாதே.

க்ரு :—அர்ஜுனா? ப்ரும்மசூத்ர மிருக்கிறது. அதை நானே வேத வ்யாஸராகயிருந்து சொன்னேன்.

அர் :—உமக்கு வேதம் எப்படித்தெரியும்?

க்ரு :—நானே வேதஸ்வரூபி, எனக்கு ஸ்வயமாகவே தெரியும்.

அர் :—சுவாமீ! இந்த அத்யாயத்தின் முக்கிய அபிப்ராய மென்ன? எனக்கோ மோக்ஷம் வேண்டியது அவச்யந் தான்.

க்ரு :—அர்ஜுனா! நீங்கள் சாப்பிடும் ஸகல ஆகாரங்களையும் உங்கள் உள்ளிருந்து ஜீர்ணிக்கச் செய்பவன் நான்தான். லோகத்தில் இருவர் புருஷர்கள். ப்ரும்மா முதல் எறும்பு வரையிலுமுள்ளவர் க்ஷரன். ப்ரக்ருதி பந்தரஹித சுத்தாத்மா அக்ஷரன் எனப்படும். இவர்களுக்கு மேற்பட்டவன் புருஷோத்தமன். அவன் தான் நான். பாரதா! இதுதான் என்னை அறிவது.

ச்லோகம்

இதி குஹ்யதமம் சாஸ்த்ரம்
இதமுக்த மயாநக
எதத்புத்வா, புத்திமாந் ச்யாத்
க்ருதக்ருத்யச்ச பாரத.

கீர்த்தனம்.

ராகம் : தர்பார் தாளம் : ரூபகம்.

பல்லவி.

நித்யரூப எவரி பாண்டித்ய மேமி நடுத்ஸுரா (நி)

அனுபல்லவி.

ஸத்யமைன ஆக்ஞ மீற, ஸாமர்த்யமு கலதா (நி)

சரணம்.

பானுபகலுரேயு ரத்னசானு சட்டடா.
பூனிசேஷுடு மிதபார பூமிமோயடா,
வீனுலந்து, காவீபதி நீநாமமு பல்கடா
மானித்யாக ராஜவினுத மஹிமாஸ்பதமகு நீ முந்து. (நி)

இரண்டாம் அங்கம் முற்றிற்று.

---

## அங்கம் 3. காக்ஷி 1.

## 16-வது அத். தேவாஸுரஸம்பத் விபாக யோகம்.

(ஸ்வேதத்விபத்தில் ஸ்ரீமந் நாராயணனுக்கும், ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி ஆகிய மூன்று பிராட்டிகளுக்கும் சம்பாஷணை)

பாட்டு.

ராகம் : ஹிந்துஸ்தானி                    தாளம் : ஆதி.

பிராட்டிகள் :— சீர்பெரும் கீதையை ஆதரவுடன் உணர்
பவர் எவர் உரை செய்திடுவீரே ஸ்ரீ ஹரி
நீரிதை அறிகுவீரே நாங்கள்
தெரிந்திட மிகமகிழ் சிறந்திட திருவுளம்
கனிந்தினிதுடன் மொழிந்திடுவீர் நீரே.

நாரா :— தேவ ஸுகுணனிதை விரும்பிடுவான்
தீய துர்க்குணனிதை வெருத்தகல்வான்
தூய ப்ரும்ம ஞானியும் மகிழ்வான்
தத்துவம் தெரிந்தவன் அனுஸரிப்பான்
திவ்ய பகவத் கீதையின் பெருமைதன்னைத்
தினம் துதிபுரிபவர் மனம் பரவசமடைந்தெனது
பாதமலரை மேவிடுவாரே.

பிராட்டிகள் :— ச்யாமஸுந்தர கருணாகர ரூபா
ஸமானரஹித ஸத்குண தீபா
க்ஷேமாச்ரயனே புவனபிதா
சீல ஸுஜனபரி பால ஜெயதரவிசால
அமர அனுகூலனும் நீரே. (சீர் பெரும்)

பூதேவி :—நாதா! எந்த வித குணம் உள்ளவருக்குக் கீதைபலிக்கும்.

நாராயணன் :—பூதேவி! பூமியில் வசிக்கும் ஆத்ம கோடிகள் விஷயத்தில் உனக்குள்ள கருணை அறிந்தேன். தேவ சுபாவ முள்ளவருக்குக் கீதை பலிக்கும். அஸுர ஸுபாவ முள்ள வருக்கு பலிக்காது.

ஸ்ரீ தேவி!—நாதா! இந்த பேதம் எப்படி அறியலாம்?

நாரா:—லக்ஷ்மீ! நான் சொல்லப்போகும் இருபத்தாறு குணங்கள் உள்ளவன், தேவசுபாவமுள்ளவனென்று தெரிந்துக்கொள். பயமில்லாதிருப்பவள், ஸத்வ சுத்தி அந்தக்கரணத்திற்கு; ராஜஸ் தாமஸ குணஸ்பரிசமில்லாமலிருத்தல், சுத்தாத்ம சொரூபம், விவேகிப்பத்தருந்தது. ஞானயோகத்தின் ஸ்திதியும், தானமும் தமமும், மனேநிக்ரஹமும், பலாபேக்ஷையில்லா பகவதாராதன ரூபயக்ஞம், வேதாத்யயனம், தபஸு உபவாஸாதி வ்ருதங்கள், ஆர்ஜவம், மனோவாக்குக்காயம் ஒன்றுபடுவது, பரபீடையில்லாமலிருத்தல், ஸத்யம், கோபமில்லாமலிருத்தல், ஆத்மாவுக்கு அனுகூலமில்லாத வஸ்துக்களை திரஸ்க்கரித்தல், சாந்தி, கோள் சொல் சொல்லாமலிருத்தல், ப்ராணிகளிடத்தில் தயை, விஷயாதிகளில் ஞாபகமில்லாமலிருத்தல், ம்ருதுத்வம், ஸாது ஜனங்களோடு கலந்திருக்கும் ஆசை, துஷ்காரியங்களைச் செய்ய லஜ்ஜை, விஷயங்களிலீடுப்பட்டிருந்தாலும் புத்தி சலிக்காமை, தேஜஸ், க்ஷமை, பிறரால் பாதை உண்டானலும் அதனல் சலித்துவிகாரமடையாமை, தைரியம், மஹா ஆபத்காலத்திலும் பகவத் ஸங்கல்பமென்னும் நிச்சயம்,

சுசித்வம், துரோஹமில்லாமை, கர்வமில்லாமை, இவையெலாம் தேவ சுபாவமுள்ளவனுக்கு உண்டாகும் நற்குணங்கள்.

நீளா:—நாதா! அஸுர சுபாவங்களையும் தெரிவியுங்கள்.

நாரா:—நீளா! சொல்லுகிறேன் கேளுங்கள். டம்பம், தன் அற்பதனம் தெரிந்தும் மகுத்துவத்தைக்காட்டிக்கொள்ளல், மதம், அதிமானத்வம், தனக்கு சமானர் இல்லையென்கிற நினைவு. இந்த பாவங்களை விடமாட்டான், இது அக்ஞானமுள்ள அஸுர சுபாவம்.

பூதேவி:—நாதா! நாங்கள் மூவரும், எந்த ஸ்வபாவத்தில் சேர்ந்தவர்கள்?

நாரா:—பதினான்கு லோகங்களுக்கும் நீங்கள் மாத்ருபாவமாகையால், த்ருகுணாதீதத்வத்தைப் பெற்றவர்களே.

ஸ்ரீதேவி:—நாதா! அசுர ஸ்வபாவம் கெட்டதாகையால் அதை விவரித்தால்தான் ப்ராணிகள் அறிவார்.

நாரா:—அசுர ஸ்வபாவிகள் இது நல்லது, இது கெட்டது என்று யோசிக்காமல் ப்ரவேசித்துச் செய்தும் கார்யம் முடியாது தவிப்பார். அந்த மூடர் காலையில் எழுந்ததும், ஊர் கெட்டுப்

போர்சென்று சொல்லிக்கொண்டே எழுந்தி ருப்பார்கள். அவன் ஆசையென்னும் வலை யில் சிக்கி அன்யாயமாய் த்ரவ்யம் ஸம்பாதிக்க அலைவான். அருமையினால் விதியறியாமல், பேருக்கு யக்ஞம் தானம் தபசுயெல்லாம் இவ னும் செய்வான். இவன் கொண்ட துர் அபிப் ராயம் முடியாததால் க்ரோதம் ஆரம்பித்து, ஆத்ம நாசம் வரையில் தேடிக் கொள்வான்; துஷ்டனுக்குச் சத்ரு வேண்டாம், அவனுக் கவனே சத்ரு.

நீளா :—நாதா! இன்னமும் அவர்கள் ஸ்வபாவத்தை விவரித்துச் சொல்லுங்கள்.

நாரா :—ராவணன் ஸீதையைப்பார்த்து 'ஸீதா என் ஒன்பது தலை சிவனை வணங்கிற்று; மற்றொரு வருக்கும் வணங்காத இந்த ஒரு தலையும் உனக்கு வணங்கினது' என்று சொன்னான். அதுபோல் இந்த பாபிகளுக்கு ஒரு யீச்வர நிச்சயமில்லாமல் எவ்வளவோ பாபங்களைத் தேடி அசுத்த மான நரகத்தில் வீழ்கிறார்.

பூதேவி :—நாதா! நரகத்தில் அசுத்த நரகமேன்ன?

நாரா :—அசுத்த நரகமென்பது, மல மூத்ர ரக்த மாம்ஸங்களால் நிறைந்த வைதரணீயென்னும் நதியைத் தாண்டுதல் முதல் இருபத்தெட்டு நர கங்கள் உண்டு. இந்த நரகத்தைத் தவிர்க்க

மார்க்கம் என் நாம உச்சாரணமே யென்று சுகப்ரும்ம ரிஷி சொல்லியிருக்கிருர்.

ஸ்ரீதேவி :—நாதா! ஜீவர்கள் உய்யுமாறு சுருக்கமான வழியைச் சொல்லுங்கள்.

நாரா :—காமக்ரோத லோபம் விட்டால் போதும். அதை விட்டால் மனம் என் விஷயத்தில் தானுகச்செல்லும். அதனுல் பரமகதி யடையலாம்.

நீளா :—நாதா! மனிதர்கள் சாஸ்திரப்ரகாரம் நடக்க முடியுமா ?

பெரு :—நடக்காதவன் போகட்டும். நடப்பவனேயே நாம் கடாக்ஷிப்போம்.

ராகம் : ஹிந்துஸ்தானி. தாளம் : ஆதி.

பிராட்டிகள் :— ஆதாரமூல ஜெகன்னுதா
அருமறைகள் போற்றிய விநேதா
பேதாபேதமற்ற ப்ரக்யாதா
பரப்ரும்ம ஸ்வரூப ப்ரபோதா
நீதிசேர் ஸத்திய விரதா
நிர்க்குணுதீத ஸுக புனிதா
தீதிலா ஸாதுஜன விஹிதா
துஷ்டரைக் கார்த்திட வொண்ணுதா (ஆ)

நாரா :— ஸர்வலோக சுதந்திரன் நானே
ஸாது ஸங்க ஹிதம் புரிவேனே
துர்ஜனரிடம் நானணுகேனே வெகு
தூரம் விலகி யகல்வேனே

அவர் கர்வத்வம்சம் செய்வேனே
    கேடில்லார்க்குத் துணையாவேனே
கீர்த்திசேர் என் ஆக்ஞையை நானே
    கெடுத்திட மனமுமிசையேனே. (ஸர்)

பிரா:— ஸாது துஷ்டஜனரெனும் பேதம் தனை
    தடுத்தருள்வது மிக நீதம்
தீதுகள் புரிவோர் அபராதம் தனைத்
    தீர்த்தளிப்பீர் திருப்பாதம்
மாதயா மூர்த்தியே நிதியே
    மஹிமைசேர் கருணைவாரிதியே
ஆதரவுடன் காத்தருள் கதியே
    புவியில் அனைவரும் உன் ஸந்ததியே. (ஆ)

நாரா:— கீதைனய யுணர்ந்தவன், பெரும் ஞானி அதைக்
    கேட்பவன் எனதபிமானி
நீதியோடு நடப்பவன் நிதானி
    நித்ய முக்தியடையும் ப்ரதானி
யீதறிந்தவர் பாசத்தில் மயங்கார்
    இகலோக மாயையில் தியங்கார்
பூதலமீதவன் பெருஞ்சீலன்
    புண்யலோகம்வரும் அனுகூலன் (ஆ)

---

அங்கம் 3.] 17-வது அத்யாயம். [காட்சி 2.

## ஶ்ரத்தாத்ரய விபாகயோகம்

(கபீர்தாஸர் சரித்திரத்தால் விளக்கம்)

ஞானதேவரும், நாமதேவரும் கபீர்தாஸரைக் காண வருதல்.

(பூமி மெச்சிடும் என்ற மெட்டு) திஸ்ரகதி ஏகதாளம்

க்ஷீரஸிந்து சயனாச்ரு தாகஹர
ஶ்ரீபதே மனுஜாக்ருதே பூமிஜாபதே
க்ருத தண்டகாவன நிவரஸி மௌனிஜன
பூஜன அரவிந்த லோசன

தசரதேந்த்ரபுத்ர தானவாரி மித்ர
ஸன்மித்ரா மாரஸத்புத்ரா திவ்யசாரித்ரா
நிஜ பக்த மார்த்தம் தீனம் பாலய ரகுவர
பாஸ்கர குலசேகரா

கபீர்தாஸர், ஞானதேவரையும், நாமதேவரையும், சாஷ்டாங்கமாய் நமஸ்க்கரித்து அவர்களை க்ரஹத்திற்குள் அழைத்துச் செல்லுதல்.

(கபீர்தாஸ் தன் மனைவியை நோக்கி ஓர்புறமாக)

கபீர் :—ப்ரேயஸீ! மஹான்கள் பசியோடு வந்திருப்பதாகத் தெரிகிறது. இந்த இரவில் நாம் என்னசெய்யலாம்?

மனைவி :—சுவாமீ! சஞ்சலம் வேண்டாம். ஶ்ரீராமசந்த்ரானுக்ரத்தை முன்னிட்டுக் கடைவீதி போய் வருகிறேன்.

கபீர் :—ஸரி.

(கபீர் மனைவி கடைவீதிக்குச் செல்லுதல்.)

கபீர் (ஆத்மகதம்):—ஆஹா! ஹே தாரித்ரமே! உன் வலிமையா யிது? ஶ்ரீராமசந்த்ரா! உன்னை மறவாத யென்னையும் சோதிக்கவேண்டுமா?

பதினன்கு லோகங்களும் உன் சொந்தமல்லவா? உம்—உன் கடாக்ஷம்பெற்ற யென்னை இந்த தாரித்ரம் யென்ன செய்யும்.

கடைவீதி. (கபீர் மனைவி பகவானை ஸ்மரித்துக் கொண்டு வருதல்.)

ராகம்: ஹிந்துஸ்தானி தாளம்: ஆதி.

பல்லவி.

ஸாரஸநாபஸுரேசாதரா
தரவரதாரக ஸ்ரீயதுநாதா

அநு. சர.

பாஹி பராத்பர பங்கஜாக்ஷா
கருடஸமாச்ருத வாரிதிசாயினந்த
ஜன பாவவன நாம ஸ்ரீராமானந்த
ஜன பாவன தாரக நாமா (ஸாரஸ)

(கடைவீதியில் ஓர் கடை தவிர மற்றவை மூடப்பட்டிருக்கின்றன)

வர்த்தகன் :—(ஆத்மகதம்) பையன் வருவதாகப் போனவன் வரவில்லை. கணக்குகளும் எழுதி முடிந்தன. அதிகநேரமும் ஆச்சுது, கடை மூடுவோம்.

(கபீர் மனைவி கடை ஸமீபத்தில் வந்து)

க. ம. (ஆத்மகதம்) :—எல்லாக் கடைகளும் சாற்றி விட்டார்கள். யாரோ ஒரு புண்யவான் மாத்திரம், கடை திறந்திருக்கிறார். இதுவும் ரகுபதி

யின் அனுக்ரஹந்தான் : (வர்த்தகனை நோக்கி) ஐயா ?

வர் :—யார் ?

க. ம :—சுவாமீ, புண்யசீலரே ! தீர்த்தவாசிகளாகிய பரம ஸாதுக்கள் இருவர் எங்களை நாடி வந்திருக்கிறார்கள். அவர்களது பசியைத் தணிக்க க்ரஹத்தில், ஒன்றுமில்லை. தாங்கள் தயவு செய்து இரண்டு பேர்களின் பசி தணிக்க வேண்டிய ஸாமான்களைக் கொடுத்தால் அதன் கிரயத்தை நாளை உதயத்தில் கொண்டுவந்து தருகிறேன். தயவு செய்யுங்கள்.

வர் :—இந்த நிசியில் அகாலத்தில் ஸ்திரீ—தனியாய் வந்த நீயார் ?

க. ம :—நான் யிவ்வூரில் வசிக்கும் வைஷ்ணவராகிய கபீர்தாஸரின் மனைவி.

வர் :—ஏழைகளாகிய நீங்கள் நாளை மாத்திரம் எவ்விதம் கொடுக்கப் போகிறீர்கள். உன்னைப் பார்த்தது முதல்—உன்னிடமே ஆசை உண்டாகிறது. என் மனோரதத்தை நிறைவேற்றி உனக்கு வேண்டிய சாமான்களைக் கொண்டு போகலாம். எனக்குப் பணம் வேண்டாம்.

க. ம :—(ஆத்மகதம்) ராமசந்த்ரா ! நான் என்ன செய்வேன். ஸாதுக்களோ பசியோடு யிருக்

கிறார்கள். இந்தப் புண்யவான் தவிர மற்றவர்கள் கடைகளை முடிப்போய்விட்டார்கள். ஸரி, பர்த்தாவின் சித்த வ்ருத்தியை அறிந்து அதை அனுஸரித்து நடப்பதுதான் ஸ்திரீதர்மம். ஆகையால், இந்த வர்த்தகரின் அபிப்பிராயம் போல் ஸம்மதித்து, பரம பாகவதர்களின் பசியைத் தீர்ப்பது தான் உத்தமம். சரீர அபிமானத்தை விட்ட என் ப்ராணேசரும் சம்மதிப்பார். இதல்லாமல் வேறு வழியில்லை. (வர்த்தகரைப் பார்த்து) ஐயா! தங்களிஷ்டம்போல் நடக்கிறேன். ஹே புண்யாத்மா! நான் வேண்டின வஸ்துக்களைக் கொடுத்தனுப்புங்கள். ஸாதுக்களின் பசியைத்தணித்துப் பர்த்தாவின் அனுமதியும் பெற்று வருகிறேன்: ஸ்திரீகளுக்கு சுதந்திரம் கிடையாது. பர்த்தா அனுமதி பெற்றுவந்தால் பாபமும் கிடையாது.

வர்:—உன் வார்த்தையில் எனக்கு நம்பிக்கை இல்லை. என் எண்ணத்தைப் பூர்த்தி செய்தால் வேண்டியதைக் கொடுக்கிறேன். இல்லாவிட்டால் போகலாம். நானும் கடை சாற்ற வேண்டும்.

க. ம:—ஹே, மஹானுபாவா! யென்வார்த்தையில் நம்பிக்கையில்லாவிடில், நான் செய்யும் பிரதிக்ஞையையாவது நம்புங்கள். ஐயா, ஸத்யத்

தினல்தான் உலகம் நிலைத்திருக்கிறது, நானும் ஸத்யமே சொல்கிறேன். நான் வரத் தவறுவேனுகில்,பர்த்தா வார்த்தையைக் கடப்பவளும், மாமன் மாமியரைத் தூஷிக்கிறவளும், முன்பு புஜிப்பவளும், வீட்டுக் காரியங்களைச் செய்யாதவளும், பொய்யே பேசுகிறவளும் அடையும் பாபத்தை நான் அடைவேன். ஆகையால், ஸந்தேஹிக்காமல், சீக்ரம் ஆஹார ஸாமான்களைக் கொடுங்கள்.

**வர்** :—இந்த ஸ்திரீ, இத்தனையும் உண்மையான மனதோடு சொல்கிருள். ஸரி, ஸாமான்களைக் கொடுத்தினுப்புவோம்.

(வர்த்தகன் ஸாமான்களைக் கொடுத்தனுப்புதல்)

கபீர் க்ருஹம் : அவரது மனைவி திரும்பிவருதல்

**கபீர்** :—ப்ரியே! இந்தப் பரமஸாதுக்களின் பசி போக்க யெந்தவித ப்ரயத்னம் செய்து கொண்டு வந்தாய்?

**க. ம** :—சுவாமீ! எல்லாக் கடைகளையும் சாற்றிவிட்டார்கள். நமது ஸ்ரீ ராமசந்த்ரன் ப்ரபாவத்தால் ஒரு கடை மாத்ரம் திறந்திருந்தது. கடனுக அந்த வர்த்தகரிடம், ஆகார ஸாமான்களைக் கேட்டேன். கடன் கொடுத்தால் மாத்திரம், ஏழைகளாகிய நீங்கள், எங்கிருந்து கொடுப்பீர்களென்று சொன்னதோடு, அவ்

வர்த்தகர் யென்னிடம் அற்ப விஷய அபேக்ஷை கொண்டனர். வேறு மார்க்கமில்லாததாலும், தாங்களும் என்னை யெதிர்பார்த்துக் கொண் டிருப்பீர்களென்றும் நினைத்து, தங்கள் திருவடி களை ஸ்மரித்து, எல்லா பாரத்தையும் ரகுபதி யிடம் சேர்த்து, வர்த்தகரின் அபேக்ஷைக்கு ஸம்மதித்து ப்ரதிக்ஞை செய்து, ஸாமக்ரியை களைக் கொண்டு வந்தேன். குற்றமிருந்தாலும், என்னை மன்னிக்கவும்.

கபீர் :—ஆஹா! பெரியோரால் எனக்களிக்கப்பட்ட உத்தம தனமே! என்குல தெய்வமே! ஸ்ரீராம சந்த்ரன் க்ருபையால், உனக்கு உண்டான உத் தம த்ருடசித்தத்துக்கு மகிழ்ந்தேன், மகிழ்ந் தேன். என்உயிரே! இந்த ஸாதுக்கள் பசிதீர்த்த வுடன் உன்வாக்யத்தை, ஸத்யவாக்யமாக நடத் தலாம். பக்தர்களுக்காக நித்ய ஆத்மாவையும் அர்ப்பணப்படுத்த வேண்டும். அழியும் சரீரத் தைக் கொடுப்பதில், என்ன சந்தேஹம். நீயே உத்தமி. என் மானத்தைக் காப்பாற்றினை. ஸாதுக்களின் பசியைப்போக்கினை. சீக்கிரம் அவர்கள் பசியாறட்டும்.

(ஸாதுக்களுக்கு ஆகாரம் செய்து வைத்தபிறகு)

கபீர் :—ப்ரியே! நேரமாயிற்று. என்மனம் திருப்தி யடைந்தது. ஸாதுக்கள் பசிதீர உதவிசெய்த

வர்த்தகரை நீபோய் சீக்கிரம், ஸேவிக்கவேண்டாமா?

க. ம:—நாதா! இவை நமது ராமசந்த்ர மூர்த்தியின் லீலா விநோதங்கள். இதோ போகிறேன்.

கபீர்:—ப்ரியே, நீ ஸ்திரீ, தனியே போகலாகாது. அதிக இருளாகயிருக்கிறது. மேலும் வழியெல்லாம் சேறாகயிருக்கிறது. வர்த்தகரோ பரமோபகாரம் செய்தவர். அவருக்கு நாம் எந்தவிதத்திலும் அதிருப்திவராமல் ஸர்வ ஜாக்றதையாய் நடக்கவேண்டும். எனக்கு ப்ரதி சொல்லாதே.

க. ம:—இல்லை, இல்லை.

கபீர்:—என் தோளின்பேரில் ஏறிக்கொள்.

(கடைவீதி: கபீர், தன் மனைவியை, தன் தோள்மீதேற்றி வந்து கடைஸமீபம் விட்டுப்போதல்)

க. ம:—(வர்த்தகனையணுகி) ஹே, மஹானுபாவா! நான் இதோ வந்துவிட்டேன்.

(வர்த்தகருக்கு பகவதனுக்ரஹத்தால்
நல்ல புத்திவந்து நமஸ்கரித்தல்)

வர்:—ஹா! ராமா! ராமா! ராமசந்த்ரா. (சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து) தாயே! உன் பர்த்தா கபீர்தாஸர் ஸ்ரீ ராமசந்த்ர பஜனையில் சிறந்த மஹானுபாவர். எனக்கு யிப்போதுதான் ஞாபகம் வந்தது. அந்த ஸாதுபுங்கவரின் பார்யா

ளாகிய தங்களை, ஸாக்ஷாத் லோகமாதா வெனத்தரும். தங்களிடம், மஹா பாபியாகிய நான் கொண்ட எண்ணத்தையும், என் ஜென்ம பாபத்தையும் போக்கி, தங்களின் புத்ரனைக பாவித்து, அபயமளித்து யென்னைக் கடைத் தேறுமாறும், யிந்தப் பாபி உஜ்ஜீவிக்கவும் அனுக்ரஹிக்க வேண்டும்.

(இந்த சப்தம் கேட்டு கபீர்தாஸரும், ஞானதேவரும், நாம தேவரும் வர, வர்த்தகன் அவர்களை நமஸ்கரித்து)

வர்:—ஹே ஸாது ஜனேச்வரா! நான் மஹாபாபி. காமகிங்கரன். எனக்கு ஸமமான பாபி எந்த லோகத்திலும் கிடையாது. தங்கள் திருவடிக்கு ஸர்வா பாரதியுமானேன்.

கபீர்:—ஹே புண்ய ராசி! உம்மால் அளிக்கப்பட்ட உத்தம அன்னத்தை, பகவானுக் கொப்பாகிய ஞானதேவரும், நாமதேவரும் புஜித்தார். தாம் பூர்வ ஜென்மங்களில் செய்த புண்யவசத்தின் தொடர்வு யிது. உத்தமர்களுக்குப் பகவான் கஷ்ட முண்டாக்கியே ஸௌக்யத்தைக் கொடுப்பது போல், தமது மனது சலித்ததற்குக் காரணம், அதன் மூலமாய் யிந்த மஹான் களின் தரிசனமும் அவர்களின் கடாக்ஷமும் மோக்ஷ பிக்ஷையும் உண்டாவதற்கே யாகும். பகவான்

கீதையில் சிரத்தாத்ரய விபாக யோகத்தில் சொன்னதுபோல் ஸாத்வீக ச்ரத்தையையே அவலம்பித்து தானம், தபசு, வாக்கு, மனஸு எல்லா வற்றிலும் பலத்தைக் கோராமலே சாஸ்திர விதிப்படி 'ஓம் தத்ஸத்' யென்னும் மந்த்ரோச்சாரணத்தோடு பகவதாராதன ரூபமான யக்ஞமே செய்துவாரும். மோக்ஷமே சித்திக்கும்

(எல்லோரும் பாடுதல்)

ராகம் -- ஹிந்துஸ்தானி தாளம் - ஆதி.

ப: மாமவ ஜனகஸுதா ஜானே மா

அ: அமரவினுத குண அகஹர சரண
சர்மித கோர நக்தம் சரகண மாம.
பரதஸஹோதர பாவிதஸகன
பாகவசதாரய விமலஸுசீல மாமவ

(ஞானதேவரும், நாமதேவரும் பாடிக்கொண்டு ஸ்வஸ்தானம் செல்லுதல்)

ராகம்: ஹிந்துஸ்தானி தாளம்: ஆதி.

ஸுமஸமான சரண ராகவா விமலமாமவாசு
அமல ஹிருதய கமல நிலய வாரி ஜாஸ வினுத விபவ

தொகையறு.

கோதண்ட காண்ட பரிமண்டித பாஹுதாண்டா
வேதண்ட ரக்ஷரகு வீரஸுவர் ஜிதாண்ட
காமாதி துர்குணவிராமா பிராமகன
ச்யாமாதி ராமாலயா,

தசரதராமஹரே தநுபதிவாஹராமா
ஸுரபதிஸுத மதவிதளன ஸுந்தராங்க
ஸூர்யகுலஜ ஸோமஸமான.

---

அங்கம் 3.] 18-அத்யாயம். [காட்சி 3.

## மோக்ஷ ஸந்யாஸ யோகம்

### யுத்தரங்கம் : ரதத்தில் க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதம்

அர் :— (சுலோகம்)

ஸந்ந்யாஸஸ்ய மஹாபாஹோ
தத்வமிச்சாமி வேதிதும்
த்யாகஸ்ய ச ஹ்ருஷீகேச
ப்ரதக்கேசீ நிஷூதந

சுவாமீ, சில இடங்களில் ஸன்யாஸமென்றும் சில இடங்களில் த்யாகமென்றும் சொல்லியிருக்கிறீர். இரண்டும் ஒன்றுதானா, வெவ்வேறா.

க்ரு:—அர்ஜுனா! மிகுவிஸ்தாரமாகச் சொல்லியும் இன்னும் கேள்விதானா? எனக்குச் ச்ரமம் இராதோ?

அர்:—ஹே! கேசிவைரீ! பக்தர்களுக்காகப் பாடுபடுபவனே! கேசி என்னும் அஸுரனைக் கொன்றதைப் பார்க்கிலும் எனக்கு உபதேசிப்பது ச்ரமமா?

க்ரு :—அர்ஜுனா சொல்லுகிறேன் கேள் ?

சுலோகம்

காம்யாநாம், கர்மணும் ந்யாஸம்
ஸந்ந்யாஸம், கவயோ விது :
ஸர்வகர்மா பலத்யாகம்,
ப்ராஹுஸ்த்யாகம் விசக்ஷணு :

காம்ய கர்மங்களை விடுவது ஸன்யாஸ மென்றும், ஸர்வகர்ம பலத்தை விடுவது த்யாக மென்றும், பெரியோர் சொல்வர். ஹிம்ஸாதி தோஷங்களிருப்பதினுல், பந்த மேற்படு மென்றும் ஸர்வகர்ம பலனையும் விடவேண்டு மென்றும் சில சாங்கியாள் சொல்வர். யக்ஞம், தானம், தபஸ்களை விடலாகாதென்று சில மீமாம்ஸகாள் சொல்வர். இதன் விஷயத் தில் என் அபிப்ராயம் : ஸாத்வீகத்திலும், மூன்று விதம், கர்மாவிலும் மூன்று விதம், த்யாகத்திலும் மூன்றுவிதம் உண்டு. ஆனுல் எக்ஞும், தானம், தபஸு, ஆகிய ஸத் கர்மங்களை விடக்கூடாது. ஞானத்தைக் கோரினவன் கர்மா செய்யவேண்டும். கர்மா செய்யாதவனுக்கு ஞானம் உண்டாகாது. இது என்னிஷ்டம். தெரிந்ததா, செய்கிருயா ?

அர் :—நான் செய்கிறேன் ?

க்ரு :—அஹங்கார மமகாரங்கள் கூடாதென்று, இத்தனை அத்யாயங்கள் போதித்தும், 'நான்'

செய்கிறேன் என்றனையே. ப்ரதி கார்யமும் ஐந்துபேர் சேர்ந்து செய்தால் தான் நடக்கும்.

அர் :—அந்த ஐந்து பேர் யார், யார்?

க்ரு :—அதிஷ்டானம், கர்த்தா, கரணங்கள், சேஷ்டைகள், தெய்வம், இத்தனையும் சேர வேண்டும்:

அர் :—இத்தனை தெரிந்து கர்மாசெய்து 'நான்' என்பதை விட்டு, பலத்தை கோராமலிருந்தால் என்ன ஆகும் ?

க்ரு :—எவனது மனம் அஹங்காரம் விட்டதோ, பலத்தைக் கோராதோ, அவன் உலகம் பூராவும் ஸம்ஹரித்தாலும் அவனுக்குத் தோஷம் கிடையாது. எமனும், சிவனுங்கூட பகவதாக்ஞையென்று, ஸம்ஹாரம் செய்யவில்லையா? அடா நரஸிம்மனே? என்னலேயே, நேராக போதிக்கக் கேட்ட உனக்கு இன்னும், ஸம்சயமா ?

அர் :—ஆனல், சுவாமீ! இந்த மூன்று குணங்களிலும், இந்த மூன்று லோகத்தவரும் கட்டுப்பட்டவர்கள்தானென்று தெரிகிறது.

க்ரு :—ஆம். ஆகையால், ப்ரம்ம, க்ஷத்ரிய, வைச்ய, சூத்ரர்களென்ற நான்கு ஜாதியர்களும் அவரவர் தர்மத்தை ஸரியாய் நடத்தவேண்டும். உன் தர்மமாகிய, யுத்தத்தைச் செய்.

அர்:—இவ்வளவு கீதையைக் கேட்டும் யுத்தம் என்னை விடவில்லையா.

க்ரு:—பரந்தபா! உன்னை நம்பியே அல்லவா, யுத்தம் ஆரம்பித்தது. சத்ரு நாசம் ஆகவேண்டாமா? துஷ்டநிக்ரஹம் ஆகவேண்டாமா? துர்யோதனாதியர், தெய்வத்வேஷிகளல்லவா?

அர்:—துஷ்ட நிக்ரஹம் செய்தால், மோக்ஷந்தானா?

க்ரு:—வித்தை படித்து பரிக்ஷையில் தேறினால், பரிக்ஷையே உத்யோகம் கொடாது. படிப்பும் உத்யோகம் கொடாது. அதற்கு மேலதிகாரியின் இஷ்டமும், தயவும் உண்டாகித்தான் பதவி கொடுக்கவேண்டும். அதுபோல் நான் ஸந்தோஷித்துதான் மோக்ஷம் கொடுக்க வேண்டும்.

அர்:—பாபமாகிய யுத்தகர்மா வேண்டாமே?

க்ரு:—எந்தக் கர்மாவிலும், பாபம், கலந்துதானிருக்கிறது. ஹோமம் செய்தால், தான்யத்தில் ஆத்மாயில்லையா, வேதாந்த விசாரத்தில் குருவுக்கு ச்ரமமானதால், பரஹிம்சையல்லவா? ஆகையால், ஸ்வதர்மமே செய்து லக்ஷ்மீ புருஷகாரத்திற்கும், என் முகோல்லாசத்திற்கும் ப்ரீதியாகும் பக்தி செய்.

அர்:—இதுவரையிலும் நான் பக்தியில்லாமலாயிருக்கிறேன்.

க்ரு :—இதுவரையிலும், ஸாதகபக்தி. இப்போது ஸாத்யபக்தி. என்னை இன்னுனென்று தெரிந்து பக்தி செய்வது தான் ச்லாக்யம்.

அர் :—ஸ்வாமீ ! உமக்கிஷ்டமிருந்தது கீதை சொன்னீர், எனக்கிஷ்டமிருந்தது கீதை கேட்டேன் : யுத்தம் செய்ய எனக்கு இஷ்டமில்லை.

க்ரு :—அப்படியானுல், எக்கேடுங் கெட்டுப்போ.

அர் :—உமக்குத் தூஷிக்க நன்ருய்த் தெரியுமே.

க்ரு :—நீ, எந்தக் கர்மாவைச் செய்யமாட்டேனென்று சொல்லுகிருயோ அதையே, உன்னைப்பிடித்த பிசாசம் செய்யப்போகிறது: சகல ப்ராணிகளையும், ப்ரக்ருதி, யந்திரத்தின் பேரிலிருப்பவனைத் திருப்புவதுபோல் திருப்பும். அன்றி, உன் பிறப்பே, உன்னை யுத்தத்திற்கு நியாமிக்கும்.

அர் :—இவ்வளவு உபதேசித்துக் கடைசியில் உதாஸினமாகத் தள்ளிப் பேசுகிறீரல்லவா?

க்ரு :—அர்ஜுனு ! நீ விசனிக்காதே. நீ விசனித்தால் நான் ஸஹிப்பேனு ? என் தங்கை ஸுபத்ரையின் ப்ரியனல்லவா? எல்லாவற்றையும் சொன்னேன். இனி உன்னிஷ்டம்போல் செய்யலாம்.

அர் :—சுவாமீ! நான் என்ன செய்யவேண்டும். ஆக்ஞாபிக்க வேண்டும்.

க்ரு :—நீ எனக்குப் பரமயிஷ்டனுகையால், முக்கிய மான பரமரகஸ்யத்தை உனக்குச் சொல்லப் போகிறேன்.

அர் :—சுவாமீ! இன்னும் ஒளித்துவைத்த உபதேச மும் இருக்கிறதா ? கடைசியில் சொல்வதால் முக்கியமானதாகத்தான் இருக்கும்: கடா க்ஷிக்க வேண்டும்.

க்ரு :— சுலோகம்

ராகம் அடாணு:

ஸர்வதர்மாந் பரித்யஜ்ய
மாமேகம் சரணம் வ்ருஜ
அஹம் துவா ஸர்வபாபேப்யோ
மோக்ஷயிஷ்யாமி மாசுச:

இதர தர்மங்கள் ஒவ்வொரு பாபத்தைப் போக்கும். நான் ஸகல பாபங்களையும் போக் கடிப்பேன். ஸகலகர்மத்தையும் விடு. மோக்ஷ மே அளிக்கிறேன்.

அர் :—சுவாமி ! இந்த கீதையை, யாருக்காகிலும் சொல்லலாமா ?

க்ரு :—தவமில்லாதவனுக்கு, கேட்கப் ப்ரியமில்லாத வனுக்கு, பக்தியில்லாதவனுக்கு, என்னை தூஷிப்பவனுக்கு சொல்லாதே.

அர் :—பக்தியுள்ளவருக்குச் சொல்லலாமோ ?

க்ரு:—என்பக்தனுக்குச் சொல்பவன், என் கடாக்ஷம் பெறுவான்.

அர்:—கீதையை அனேகருக்குப் போதித்தவனுக்கு ஸ்வல்ப பலந்தானா?

க்ரு:—அவன் எனக்கு அதிக இஷ்டனென்று நினைப்பேன். எனது கதையைப் பிறருக்குத் தெரிவிப்பவன், லக்ஷ்மீ வைகுண்டத்தைப் பார்க்கிலும் எனக்கு ப்ரியன்.

அர்:—கேட்டவர்களுக்கு என்ன பலன்.

க்ரு:—கேட்டவர்கள், ஸகலபாவங்களினின்றும், விமுக்தர்களாய், உத்தம கதி அடைவார்கள்.

அர்:—சுவாமீ! கீதை முடிந்ததா.

க்ரு:—ஏகாக்ர சித்தனாய்க் கேட்டாயா? உனக்கிருந்த அக்ஞான மோஹம் ஒழிந்ததா?

அர்:—

சுலோகம்

நஷ்டோ, மோஹ: ஸ்ம்ருதிர்லப்தா
த்வத் ப்ரஸாதாந் மயாச்யுதா
ஸ்திதோஸ்மி, கதசந்தேஹ:
கரிஷ்யே வசனம் தவ

ஹே அச்சுதா! தங்கள் அனுக்ரஹத்தினால், எனக்கு விபரீதஞானம் நசித்தது; யதார்த்த வஸ்துத்வ ஞானம் அலர்ந்தது; தாங்கள் சொன்னதைச் செய்ய ஸித்தனாயிருக்கிறேன்.

அங்கம் 3  காட்சி 4

ஹஸ்தினபுரம் அரண்மனை அந்தப்புரம்.
ஸஞ்சயன் திருதராஷ்ட்ரன் சம்பாஷணை.

த்ரு:—ஸஞ்சயா! யுத்தகளத்தில், என்ன நடந்தது?

ஸஞ்:— சுலோகம்

இத்யஹம் வாஸுதேவஸ்ய
பார்த்தஸ்ய ச மஹாத்மந:
ஸம்வாதமிமம ச்ரௌஷ மத்புதம்
ரோம ஹர்ஷணம்.

ராஜன், பரமரஹஸ்யமான இந்த யோக சாஸ்திரத்தை, யோகேஸ்வரனை ஸ்ரீ க்ருஷ்ண பகவான் ப்ரத்தியக்ஷமாய் அவரே அர்ஜுனனுக்குச் சொல்லும்போது, வியாசர் அனுக்ரஹத்தால், நானும் கேட்டேன்.

த்ரு:—ஸஞ்சயா! யுத்த விஷயம், என்ன ஆச்சுது.

ஸஞ்:—கொஞ்சம் பொறுங்கள். கேசவார்ஜுனர்களுக்கு நடந்த அத்புத ஸம்வாதத்தை, நினைத்து, நினைத்து ஆனந்திக்க விடுங்கள். ஆஹா!

த்ரு:—இனியாகிலும், சொல்கிறாயா?

ஸஞ்:—அத்புதமான விச்வரூபத்தை நினைத்தால் சொல்லவும் பேசவும் முடியுமா?

த்ரு:—ஆனால் என்னதான் முடிவு. ஜெயம் என் புத்திரர்களுக்குத்தானே?

ஸஞ் :— ஸ்லோகம்

யத்ர யோகேச்வர க்ருஷ்ணோ
யத்ர பார்த்தோ, தநுர்த்தர :
தத்ர ஸ்ரீர்விஜயோபூதிர்
த்ருவா நீதிர்மதிர்மம.

மஹாராஜா! எந்தயிடத்தில், ஸர்வேச்வரனை, ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மா, இருக்கிறரோ, எந்த இடத்தில் தனுர்த்தரனை அர்ஜுனனிருக்கிறனே, அந்த யிடத்தில், லக்ஷ்மியும், விஜயமும், ஐச்வர்யமும், நீதியும், ஸ்திரமாக யிருக்கு மென்பது என் அபிப்ராயம்.

---

**அங்கம் 3.** **காட்சி 4.**

கீதலயம்.

(துவாரகாபுரி அரண்மனையில் சபாமண்டபம்)

(கோபிகைகளும், அஷ்டமஹிஷிகளும் பகவானை வரவேற்றுபசரித்து அழைத்து வருதல்)

ராகம் : காம்போதி: தாளம் : திஸ்ரரூபகம்

பல்லவி

ஹெத்ஸரிக கா ராரா ஹே ராஜகோபாலா
ஹேமாம் பராலங்க்ருதா

அனுபல்லவி.

ஸத்சரித்ருடு நீது சரணஸேவையுசாய
ஸாரஸாக்ஷிலுகூடி ஸந்தோஷமுகாயுண்ட (ஹெ)

சரணங்கள்

1 தேவகீ வஸுதேவ தனய கௌஸல்துப ஹாரா
தேவாதிதேவ ந்ருவரா—
பாக நாகவிதார பாசமோசன தீர
ப்ருந்தாடவீ விஹரப்ரம்மஜன கார்த்திகா (ஹே)

2. கோபாலக ராரா கோவர்த்த ஞேத்ராரா
கோவிந்தா ஹரே ஸ்ரீதரா
பாபகார்ய விதூர பூதஞஸம்ஹாரா
பாஹிநந்தகுமாரா பலபத்ர ஸோதரா (ஹே)

(ஸ்ரீகிருஷ்ண பகவான் ஸிம்மாதனத்திலமர, தேவர்கள் புஷ்பவர்ஷம் வர்ஷிக்க கோபியர், கோபிகாகீதம் பாடுகிறுர்கள்.)

## கோபிகா கீதம்

ராகம் : யதுகுல காம்போதி தாளம் - ஆதி

1. ஜெயதிதே திகம் க்ருஷ்ண ஜென்மஞவ்ருஜா
ச்ரயதயிந்திரா க்ருஷ்ண சச்வதத்ரஹி
2. தயிதத்ருச்யதாம க்ருஷ்ண திக்ஷுவகாஹா
ஸத்வயித்ரு தாஸவ, க்ருஷ்ண த்வாம் விசின்வதே,

ராகம் : தோடி தாளம் : ஆதி

3. நகலு கோபிகா க்ருஷ்ண நந்தஞேபவா
அகில தேஹிஞம், க்ருஷ்ண அந்தராத்மத்ருக்
4. விகன ஸார்த்திதோ, க்ருஷ்ண விச்வ குப்தயே,
ஸகவு தேயிவான், க்ருஷ்ண ஸாத்வதாம் குலே.

ராகம், அடாணு                                                    தாளம்: ஆதி

5, ப்ரணத தேஹிநும், க்ருஷ்ண பாபகர்சனம்
த்ருணு சாரனுகம், க்ருஷ்ண ஸ்ரீநிகேதனம்
6. பணிபணுர்ப்பிதம், க்ருஷ்ண தேபதாம்புஜம்
க்ருணுகுசேஷனக் க்ருஷ்ண க்ருந்திஹருச்சயம்.

ராகம்: ப்யாக்]                                                    [தாளம்: ஆதி

7. தவகதாம்ருதம், க்ருஷ்ண தப்தஜீவனம்
கவிபிரீடிதம், க்ருஷ்ண கல்மஷாபகம்
8. புவிக்ரணந்தியே, க்ருஷ்ண பூரிதாஜநாஹா
க்ருஷ்ண, பூரிதாஜ நாஹா.

முற்றிற்று.

ஸ்ரீ க்ருஷ்ணய பரப்ரம்மணே நம:

மங்களம். சுபம்! சுபம்!!